உ

கணபதிதுணை

# ஸ்ரீமகாபாரதம்.

## ஆதிபர்வம், சபாபர்வம், ஆரணியபர்வம்

ஆகிய

முதன்மூன்று பர்வங்கள்.



இவை

திருமயிலை - வித்வான,

சண்முகம்பிள்ளையவர்களால்

வசனரூபமாக எழுதுவித்து

ப - மு - செல்வராஜமுதலியாரவர்களால்

தமது

அமரிக்கன் அச்சுக்கூடத்தில்

பதிப்பித்துப்பிரசுரிக்கப்பட்டன

சென்னை:

1890.

திருச்சிற்றம்பலம்.

## நடேசர் துதி.

கார்மலி பொழிற் புலியூர் கவின்பெறச்
சீர்மலி நான்மறைச் செல்வர் செய்கிற்கும்
நார்மலி பூசனைக் கிரங்கி நாடொறும்
ஏர்மலி நடஞ்செயு மிறைவற் போற்றுவாம்.

## திராவிடபாஷியகாரர்.

பேசுசீரெழுத் தஞ்சின் முப்பொருள் பெரிதுணர்த்திப்
பாசவேர்களைந் தென்றனைப் பரிவினி னாண்ட
தேசுபூத்ததென் றுறைசையிற் றிகழ்சிவ ஞான
தேசிகோத்தமன் சேவடி தொழுதிருள் செகுப்பாம்.

## ஞானப்பிரகாசர் துதி.

சொலலின்றற்றொடர் வருந்தன தூயசே வடிகள்
வல்வினைந்தென்றன் முடிமிசை வயங்கிடச் சூட்டிக்
கல்வினைக்கனி வித்தருள் காஞ்சியின் மேய
நலஞானப் பிரகாசனை நயந்திருள் களைவாம்.

மெய்கண்டதேசிகன் திருவடிவாழ்க.

---

ஸ்ரீசிவஞான யோகிகள்
சேவடிவாழ்க.



---

# அட்டவணை

## ஸ்ரீ மகாபாரதத்தில்

## ஆதிபர்வம், சபாபர்வம், ஆரணியபர்வம்,

முதன்மூன்றுபர்வங்களும் அடங்கியிருக்கின்றன.

முகத்தினில் வாழு மந்த மொய்குழ லருளி னாலே
பகைதெதிர் பொருத தெய்வப் பாரதக் கதையை முந்நீர்ச்
செகததினில் விருத்த யாப்பாற் செப்பெனச் செய்த தன்றே.

முற்றிற்று

குப் பணப்புதையல் கிடைத்தாற்போல அதிக மகிழ்ச்சியடைந்து அவனுக்கு வந்தனை வழிபாடுகளை யெல்லாம் செய்து முடித்து நிற்க அத்தேவபுருஷன் நீ வருந்துங்காரண மென்னவென்று கேட்க, உதங்கனும் ஆதியோடந்தமாகத் தன்வரலாறு முழுவதுந் தெரிவித்தான். அதைக்கேட்டு நீ ஒன்றுக்கும் அஞ்சாதை! ஆயின் இக்குதிரையின் காதில் ஊதென்றுசொல்ல ஒரு அழற்சியுண்டாகித் திருமறுமார்பன் பாஞ்சசன்னியத்தின் பேரொலியைக்கேட்டு அஞ்சுகின்ற அசுரரைப்போலப் பாதாளலோகத்தா ரெல்லாம் பதைபதைத்து நடு நடுங்கித் துடிதுடித்து நெஞ்சுலர்ந்து மெய்சோர்ந்து இதென்ன விபரீதம்! இவ்வழற்சியும் சத்தமும் நாமெப்போதுங் கண்டதில்லையே! நம்மினத்தினில் ஒருவனாகிய தக்ஷகன் வைதிக நிலையில் ஒழுகும் அந்தணனைச்செய்த வஞ்சனையே இவ்வாறுநேர்ந்தது! நாம் என்னசெய்வோம்! ஐயோ தெய்வமே யென்று கரைந்து கரைந்துருகி, யாருமொருங்குகூடி தக்ஷகன் கவர்ந்த கம்மலை அவனைக்கொண்டேகொடுப்பித்தனர். அதனைப்பெற்றுப்பெருமகிழ்ச்சி யடைந்து, கெடுவாய்விட்டதே யென்று கிலேசப்பட்ட உதங்கனைப்பார்த்து பிரமசரிய நிலைவழுவாத அந்தணனே! ஏன் வருந்துகின்றனை? என்று முன் தெய்வப் புரவிமேல் தோன்றிய மஹாபுருஷன் மீண்டும் வந்துகேட்க; இறைவனே! இத்தனைநாளில் கொண்டுவந்து கொடுக்கிறேனென்று என்குரு பத்தினிக்குச் சொல்லிவந்த கெடுவாய்விட்டதே, நானோ நாகலோகத்தி லிருக்கின்றேன், எப்போது அந்த அன்னைக்கு இக்கம்மலைக் கொடுப்பேனென்று எண்ணிவருந்துகின்றே னென்ன; அம்மஹாபுருஷன் ஐயா! இக்குதிரையின் மேலேறு, ஒருகணப்போதில் உன் குருபத்தினி யிருக்குமிடத்திற்கு விரைவிற் கொண்டுபோய் விடுமென, அவ்வுதங்கன் அக்குதிரையிலேறியவுடனே அவனை அப்பயிலவமுனிவன் இருக்கைக்குக் கொண்டுவந்துவிட்டு மறைந்துபோய் விட்டது. உதங்கன் தன் ஆசிரியன் இருக்கையை யணுகித் தன்குருபத்தினிக்குக் கம்மலைக்கொடுத்துவிட்டு அஷ்டாங்க பஞ்சாங்கமாக நமஸ்கரித்தான்! அவ்வன்னை அவனைநோக்கி நீ வெகுபிரயாசைப்பட்டுக் கொண்டுவந்தமையால் உன்பத்திக்கு மெச்சினேனென்று வாழ்த்த விடைபெற்று ஆசிரியனிடஞ்சென்று வணங்கிநின்றான். சகல சாஸ்திரபாரங்கதனாய் கேவல நிலைமை யுணர்ந்த உதங்கா! நீபவுடியர்ந்த மகாராசன்மனைவி காதிலிருக்கும் கம்மலைக் கொண்டுவர இத்தனைநாள் தாமசமென்ன? சொல்லென்றுகேட்க, அதற்கவன் அங்கேபோனதுமுதல் வந்தவரையிலும் நடந்தவரலாற்றை ஒளியாமற் கூறிப் பின்னுஞ் சொல்லுகின்றான்; தான்போகையில் வெள்ளையெருதிலேறி ஒருபுருஷன் மறித்ததும், அவன் அதன் கோமயம் புசியென்றதும், தக்ஷகன் கம்மலைக் கவர்ந்தபோது வெள்ளைக் குதிரையிலேறி ஒரு மகாபுருஷன் தன்னை நாகலோகங்கொண்டு சேர்த்ததும், அங்கேயிரண்டுமாதர் கறுப்புநூலையும் வெள்ளை நூலையும் சுற்றிக்கொண்டு இருந்ததும், மற்றொருபுறத்து அறுகோண பீடமும், கோணத்திற்கிரண்டிதழும், ஆறுகுமாரருமிருந்தமையும்விளக்கமாகத்தெரிவிக்க வேண்டுமென்ன? அதற்குப்பயிலவமுனிவர்சொல்லுகின்றார். உதங்கா! வெள்ளை யெருதிலேறிமறித்தவன் இந்திரன், அவ்வெள்ளையெருது ஐராவதம், கோமய

அமுது; நாகலோகத்தில் கறுப்புநூலையும் வெள்ளைநூலையும் சுற்றிக்கொண்டிருந்தமாதரில் ஒருத்திபெயர் தாதை, மற்றொருத்திபெயர் விதாதை, கறுப்பு நூல் இரவு, வெள்ளைநூல் பகல், அறுகோணபீடம் பூமி; கோணங்கடோறுமிரண்டிதழ்கள் பன்னிருமாதம், ஆறுகுமாரர் ஆறு இருதுக்கள்; குதிரையோடு தோன்றிய மஹாபுருஷன் வருணன், அக்குதிரை அக்கினிபகவான், நீ குருபத்தியுடையவனாகையால் இவர்களெல்லாம் உனக்குச் சகாயம் செய்ய வந்தனர். உனக்கு ஒப்பாவாரை யிந்நிலவுலகத்திற் கண்டறியேன்! மகனே யென்று வாரித்தழுவி விடையளிக்க விடைபெற்றுத்தான் தவச்சாலையணுகிச் சிலநாள் தவஞ்செய்துகொண்டிருந்து பின்னொருநாள் தனக்குக் கம்மலைக் கொண்டுவருங் காலத்தில் தனக்குக் கேடுநினைந்த தக்ஷகனுக்குக் கெடுதி செய்யவேண்டுமென்று எண்ணிச் சந்திரகுலோத்துங்கனாகிய ஜெனமேஜய மகாராஜன் அத்தாணி மண்டபமேபோய்ச் சேர்ந்தான். அம்முனிவனைக் கண்டவுடன் திடீரென்று தன்னாசனத்தைவிட்டெழுந்து எதிர்கொண்டழைத்துப்போய் அழகிய ஆசனமொன்றிட்டு அதன்மே லெழுந்தருளப்பண்ணி யோகக்ஷேமங்களை விசாரித்துத் தேவரீர் இவ்விடத்திற் கெழுந்தருள என்ன தவஞ்செய்தேனோ? என்று வணங்கிக்கேட்ப, அதற்கு அந்த உதங்கமுனிவன் அரசர்பிரானே! நான்உம்மைநாடிவந்ததுயாதெனின்நான்கல்விபயின்றபயிலவ முனிவனுக்குக் குருதக்ஷிணையாகப் பவுடியந்த மகாராஜன் மனைவிகாதி லணிந்திருந்த கம்மலைக்கொண்டுவருஞ் சமயத்தில் வழியில் தக்ஷகன் அதற்குக்கேடு நினைந்தான். அவனையும், அவன் இனத்தாரையும் தண்டிக்கவேண்டி நான் சர்ப்பயாகஞ்செய்யவேண்டுமென்பதேயென்ன, அதற்குஅரசன்ஐயனே! 'நிறையுடைமை நீங்காமை வேண்டிற் பொறையுடைமை போற்றி யொழுகப்படும்.' என்றபடி அவன்குற்றத்தைப்பொறுத்தருள்வது தேவரீருக்குப் பொறுத்த கடமையென்றும், அவன்குற்றம் செய்ய அவனைத்தண்டிக்காமல் அவன் குலத்தவரையும் தண்டித்தல் முறைமையன்றென்றும்சொல்ல, அதைக்கேட்ட முனிபுங்கவன் ஒருவன் ஒருகுலத்திற் சிறப்படைந்தானாயின் அக்குலமுழுவதுமடையும், ஒருவன் பிழைசெய்யின் அதுவுமவ்வாறே யக்குலமுழுவது மடையுமென்று எடுத்துக்கூறி அதற்குத் திருஷ்டாந்தமாக ஒருகதையும் சொல்லுகின்றேன் கேளும் என்று பின்வருமாறு கூறுகின்றார்.

### பிருகுமுனிவன் கதை.

அரசர் பெருமானே! ஒருகாட்டில் பிருகுமுனி தன்மனைவி புலோமிசையொடு அன்றில்போலக் கூடியிருந்தான். இங்ஙனம் நடந்துவருகையில் புலோமிசை கருவுற்றாள். அதனை யறிந்த முனிவர்பிரான் வழக்கப்படி ஔபாசனாக்கினியைத் தானே வளர்த்துவந்தான். ஒருநாள் சூரியாஸ்தமான சமையத்தில் தன்காதலியாகிய புலோமிசையை யழைத்து நான் வருமளவும் இவ்வக்கினியை வளர்த்து வாவெனக் கட்டளையிட்டுத் தான் சந்தியாவந்தனஞ் செய்யச் சென்றான். அவ்வன்னை பூரணகர்ப்பவதியாயினும் கற்புடையாட்

குக் கணவன் சொற்படி நடப்பது கடனுகலின் அக்கட்டளையைத் தன்சிர மேற்கொண்டு அ[illegible]ரமத்தை நடத்திவந்தாள். அத்தருணத்தில் அவ் வக்கினியும் பிரசன்னமாய் அவ்வன்னை யளிக்கும் ஆகுதியையேற்று அக்குண் டத்தின் மத்தியில்விளங்கினுன். அப்போதுஅவ்வனம்புகுந்துஅரக்கனெருவன் இவ்வோம வெளிச்சங்கண்டு ஓமஞ்செய்யு முனிபத்தினியைக்கண்டு துராசார முடையவனுகலின் கெடுநினைவை யெண்ணி அக்குண்டத்தில் விளங்கும் அக் கினியை நோக்கி இப்பெண்மணியார்? நீயறிவையோ வென்றான். இவன் யாரோ கொடியவரக்கனுமெனமதித்து இவ்வன்னை பிருகுமுனிவன் காதன் மனைவியென் றுள்ளவாறுகூறினன். அதற்கு அரக்கன் பிருகுமுனிக்கு மனைவி யேது நான் சிறுகாலை யிவளை மணம்புணர்ந்தேன். அவளை இம்முனிவன் கவர்ந்து தான் மணம்புணர்ந்தானல்லது வேறன்று. இவளைத் தேடித்தேடி மெய்சோர்ந்தேன். இப்போதுதான்இவளைக்கண்டுகளித்தேன். இவளைவிடுவே னில்லை யென்று அதிகவேகமாய்ச்சென்று அவ்வன்னையைத் தூக்கிக்கொண்டு சென்றான்.அதைக்கண்டுபூரணகர்ப்பவதியாகிய அவ்வன்னை 'பூனைவாய்ப்பட்ட கிளிபோல் நடுக்குற்று,' இனியென்செய்வ தென்றேங்கி நிற்கையில் அவ்வரக் கன் தோளிலேயே இளஞ்சூரியனைப்போலும் ஓர் புத்திரனை யீன்றாள். அம் மைந்தன் ஞானசிகாமணியாய்த் தன் தாய்க்குக் கேடுநினைந்த துராசாரமு டையானைச் சிறிநோக்கினுன். அந்நோக்கி லிரண்டு தீப்பொறிதோன்றி அவ்வ ரக்கனை நீறாக்கிவிட்டன். உடனே இருடிபத்தினி தன் சிறுகுழவியை யெடுத் துக்கொண்டு தன் ஆச்சிரமமேபோய்ச் சேர்ந்து முனிவனும் வரவே முனிவ னிடத்து நடந்ததை யொன்றுமொளியாமல் எடுத்துச்சொல்லி நின்றனள். கேட்ட முனிவரன் கிலேசித்து அக்கினிபகவான் சும்மா இருந்தனனோவென, அவன் இன்னார் மனைவியென்று சொல்லிக்கொண் டிருக்கையிலேயே என் னைத் தொடர்ந்து எடுத்துக்கொண்டு போயின னென்றனள். சீற்றங்கொண்டு முனிவன் அக்கினியைக்கூவிக்கேட்க அவனு நடந்தவண்ணம் சொல்லவுங் இன்றுமுதல் நற்கந்தம் புசிக்கின்ற நீயினித்துர்க்கந்தமும் புசிக்கவெனக் கடுஞ் சாபமிட்டான். நான் சாட்சியாகலின்உண்மையாகக்கூறினேன், அந்தணனுக ளின் நீயிட்ட சாபத்தையும் பொறுத்தேனென்றுகூறித் தன்னமிச முழுதுங் கவர்ந்தே ஓரிடத்திற் பதுங்கியிருந்தான். பின்பு அக்கினியில்லாமையால் உலகத்தில் யாகாதி சற்கருமங்களும், மற்றைக்கருமங்களு நடவாதொழிந்தன. அதனுல் யாவரும் இந்திரனிடம் முறையிட, அவனும் சகல புவனங்களையும் படைத்த நான்முகனிடஞ்சென்று சொல்ல, பதும பீடத்தவனுகிய அந்நான் முகனும் அக்கினிபகவான் மறைந்திருந்த இடமடைந்து நான்பிருகு முனிவன் இட்ட சாபத்திற்குப் பிரதிசாபமளிக்கின்றேன்; நீ துர்க்கந்தம்புசிக்கினும் அத னுலுண்டாய குற்றமுன்னை யணுகாதிருக்கவேண்டும். இன்னும் நீ விருத்தி யடைய வேண்டும் என்றுகூறி நீயினி யுலகத்தில் விளங்கக் கடவாயென்று கட் டளையிட்டுப் பின்னர் அம்முனிவன்மனைவியழுதகண்ணீர் வீணுகாதபடியொரு நதியாக்கிஅதற்குவதுசாரையென்றும் பெயரிட்டுத்தான்சத்தியலோகமே போய் ச்சேர்ந்தான், பின்னர் பிருகுமுனிவன் தன் மகனுக்குச் சவனனென்னப் பெ

யரிட்டு அவனுக்கு நான்குவேதமும்,ஆறுசாத்திரமும், அறுபத்துநான்கு கலைக ளும் ஐயந்திரிபறக் கற்பிக்க அச்சவுனகனும் மஹாநிபுணனாய்த் தவஞ்செய்யச் செல்லவே யவனைப்புற்றுச் சூழ்ந்துகொண்டது. இப்படியிருக்க, சூரியவமிசத் தரசனாகிய யயாதியென்னும் அரசன் வேட்டையாடத் துணிந்து தன் மந்திரி, பிரதானிமுதலியபரிவாரத்தோடும்,தன்னருமந்த மகளாகிய சுகன்னி யென்பா ளோடும்புறப்பட்டு அக்காட்டிற்றங்கினான். இராசகுமாரியாகிய சுகன்னியோ தன்பாங்கியரோடும் அக்காட்டிலுள்ள விநோதங்களைப் பார்த்துக்கொண்டு வரு கையில் அம்முனிவனைச் சூழ்ந்தபுற்றில் அம்முனிவனகண்ணினொளி யப்புற்றி னிடையே தோன்றக்கண்டு இதென்ன! இப்புற்றின்கண் இரண்டு கண்ணொளி விளங்குகின்றன எனத் தானொரு சுப்பலெடுத்துக் குத்தினாள். முனிவனுக்கு அக்குத்தினால் சினமுண்டாய் முனிவரிருக்குமிடத்தில் ஒருவரும்வருதற்குத் தகுதியேயன்று;ஆயினும இவ்வாறு கொடியசெய்கைசெய்வது தகுதியாஎன்று அரசனும், மந்திரியும் ஒழிந்தபரிவாரமுழுதும் கண்ணொளி யிழக்க எனச் சபித்தனர். யாவரும் கண்ணொளியிழந்து கலங்க அரசன் மந்திரியைநோக்கி இதென்ன புதுமை! ஜனங்களோவருந்துகின்றனர் ; இவ்வாறுநேரிடக் காரண மென்னவென, மந்திரியும் அரசே! இதுவோ முனிவர் வாசமெனத் தோன்று கின்றது,நமது சேனையில் யாராலோ ஒருதீமைநேர்ந்திருக்கக்கூடும், அதனாலே இவ்வாறு நடந்ததென்றான். அரசன் திடுக்கிட்டு நாம் யாதுசெய்வது என்று நடுநடுங்கித்திடுக்கிட்டு யாவரேனும் தூர்ச்செய்கை செய்திருக்கின் தெரிவிக்க வேண்டுமென்று வள்ளுவனைக்கொண்டு பறையறைவித்தான்.அப்பறையோசை யைக்கேட்ட சுகன்னியென்னும் பெயருள்ள இராசகுமாரி தேனில் விழுந்த ஈயைப்போல வருந்தி முகமுலர்ந்து தன்தந்தையிடமே நடந்தவண்ணந் தெரி வித்தாள்அதுகேட்டு யயாதி மகாராஜன் தன்னருந்தவக் கொழுந்தாகிய மக ளையழைத்துக்கொண்டுவந்து அம்முனிவரரைப் பலவாறுதுதித்து வணங்கி என் மகள் செய்தபிழையைச் 'சிறியோர்செய்த சிறுபிழையெல்லாம், பெரியோரா யிற் பொறுப்பதுகடனே' என்றபடி பொறுத்தருளவேண்டுமென்று இரந்து வேண்டவே அம்முனிவன் பொறுத்தருளி அச்சாபத்தைத் தவிர்த்து ஆசிர் வாதஞ்செய்தருளினார். அரசனேவியப்படைந்து இச்சுகன்னியோஎன்புத்திரி! இவளைத் தெய்வமணம்புணரும் எனவேண்ட அவர்அதற்கிசையவே அக்காட் டில் ஒருகலயாணமண்டபத்தினை யியற்றி அம்முனிவர் பிரானுக்குப் பாணிக் கிரகணஞ் செய்வித்துத் தன்னகரமேபோய்ச் சேர்ந்தான்.

பின்பு அச்சுகன்னியை அம்முனிபுங்கவன் குற்றேவல்செய்ய வைத்துக் கொண்டான், இவ்வாறு சிலநாள் நடக்கையில் ஒருநாள் சுகன்னியென்னுங் கன்னி தன்கணவனுக்கு நித்திய பூசனைக்குச் ஜலந்திரட்டிவரச் சென்றாள். அச்சமயத்தில் அச்சுவினி தேவரென்னும் தெய்வமருத்துவரும், அக்கன்னி யின் நன்னயக்கற்பி னிலையையறிய ஒருவசனஞ் சொல்வாராயினர். மங்கை யர்க்கரசியே! நீயார்? உன்பெயரென்ன! உன் கணவன்யார்? நீயோ மிகவும் இளமைப் பருவமுடையவளா யிருந்தும், தக்ககணவனை மணம்புணராது வயோதிகப் பருவமுடையானை வரித்தனை! அதனாற்கண்ட பலன்யாது?

ஒன்றுமில்லையே! ஆதலின் எம்மிருவரில்யார்மேல் இச்சையோ அவரைமணம் புணர்ந்து நீபெற்ற கட்டழகினுக்கமைந்தநலமடைவாயென்றனர். சுகன்னியோ மறுவுத்தரமொன்றுஞ்சொல்லாமற் சித்திரத்திற்றீட்டிய பதுமைபோல மௌனமாகத்திரும்பித் தன்கணவனை யடைந்து நடந்தவாறு வணங்கிக்கூறினாள். இதனைத் தமது ஞானதிருஷ்டியாலுணர்ந்த முனிவர்பெருமான் பெண்ணருங்கலமே! நீயவர்களிடஞ்சென்று உங்களிலொருவருக்கு மனைவியாவதற்குத் தடையேயின்று, நீங்களேற்படுங்களென்று சொல், பின்னர் அவ்விருவருக்குந் தீராவழக்குநேர்ந்து என்னையே நாடிவருவர்; பின்னேபேசிக்கொள்கின்றேனென்றுகூற அச்சுகன்னியும் அவ்வாறே அவர்கட்குச்சென்று கூறினள்; முனிவன்கூறியவண்ணம் வழக்குநேர்ந்து தீராமல் அச்சவுனகமுனிவனிடமேவந்து தங்கள்வழக்கை யெடுத்துரைத்தனர். அம்முனிவனும் யான் அப்பெண்ணுக்குரியவனாகலின் உம்மைப்போல் எனக்கும் வழக்குண்டு. நாம் மூவரும் வேறோரிடத்திற்றான் தீர்த்துக்கொண்டு; பின்னர் மணம்புரிவோமென்று நடக்கையில் வழியில் ஒருசுனையைக்கண்டு அம்மூவரும் ஒரு சங்கேதஞ்செய்துகொண்டு அம்மாதைநோக்கி நாங்கள்இச்சுனையில்மூழ்கிவருவோம், எங்களில் உனக்கிஷ்டமானவனை மணம்புணரென்றுகூறிமூழ்கி அவ்வச்சுவனிதேவ ரெவ்வுருவங்கொண்டு வந்தனரோ அவ்வுருவத்தோடும் அச்சவுனகரும் அச்சுனையினின்றும் அவருடன் தோன்றினர். கற்பிலருந்ததியும், கட்டழகிற்றிருமகளும்போன்ற சுகன்னியும், யான் கற்பினிலே தவறாத விரதங்கொண்டிருப்பது மெய்ம்மையேயாயின், என்கணவனையே யான் பரிசிக்கக்கடவேனென்று தன் இஷ்டதெய்வத்தை வணங்கித்தொட்டவே அவன் தன் கணவனாகவே யிருப்பது நோக்கிமகிழ்ச்சியென்னும் கடலிலமிழ்ந்தினாள். அவ்விருவரும் இச்சுகன்னி கற்பின ணங்கென்று வாழ்த்தித் தம்மிருக்கையுட்சேர்ந்தனர். சுகன்னியொடு சவுனகரும் அன்றில் விழைபோக ம[illegible]சனகனென்னு முனிவனைப்பெற்று வாழ்ந்திருந்தனர். அச்சனகனும் சகலக்ஷேத்ரங்கதனுய் ஒரு அருந்தவன் மகளைமணந்து உருவனைப்பெற்றான். அவன் ஓரருந்தவர் பெருமான்மகளை வதுவைசெய்து இணைபிரியாமல் வாழ்ந்துவருகையில் ஒருநாள் சந்தியாவந்தனஞ் செய்யச்சென்றான். சென்று முடித்து மீள்வதற்குள் இருடிபத்தினியை ஓரரவந்தீண்டி விஷந் தலைக்கேறி மரணாவஸ்தையடைந்து நிற்பதைமுனிவன்கண்டு ஏதேதோதகுந்த சிகிச்சைசெய்து முடியாமல் ஏங்கியேங்கி இடிவிழுந்த மரம்போல் சிறிதுந்தோன்றாமல் திப்பிரமைகொண்டிருக்கையில் மரணமடைந்தாள். அப்போது உரூரவன் மரணமூர்ச்சையடைந்து பின்னரெழுந்து துக்கங்கொண்டு பூவின்மணம்போலவும், பாலினீர்போலவும் பிரியாதிருந்தோமே! இன்றுபிரிய நேரிட்டதே! உன்னைப்பிரிந்தும் உயிர்தரிப்பேனோ! என்று புலம்பி உயிர்விடத்துணிந்தான். அதுகண்டு ஆகாயவாணி உரூரவா! நீ இப்படியுஞ் செய்யத்துணிவது தருமமா! என்று சொல்லக்கேட்டு நாற்றிசையும்பார்த்தும் ஒருவருமில்லாமையால் இது ஆகாயவாணியொலியேயாமென்றுதுணிந்து வணங்கி நிற்க, அவனுக்கு ஒருவசனஞ்சொல்லுகின்றாள். உரூரவா! உலகில் விதியைக் கடப்பதருமை. 'ஊழிற் பெருவலிய

வுளமற் றுன்னுது,சூழினுந் தான்முந்துறும்.' என்றுபெரியோர் சொன்னபடியே உன்மனைவி விதியாலிறந்தாள். அதைச்சிந்தித்தாவதென்ன நீ உயிர்விடத் துணியலாமா? உன் ஆயுளிற் பாதிதத்தஞ்செய்வையாயின் உன்மனைவி உயிர் பெற்று எழுவாளென்பதிற் சற்றேனுமையமில்லையென, அப்படியே அவன் செய்ய,நித்திரைவிட்டெழுவார்போ லெழுந்தாள். உடனே உரூரவன் ஆனந்த சமுத்திரத்தில் அமிழ்ந்திக் கரைகாணுது அவளைவாரித்தழுவி முத்தமிட்டு நடந்தவண்ண மெடுத்துச்சொல்லி இவ்வளவு துன்பத்தையும் நமக்கு விளைத் தது பாம்பல்லவாவென்று கடுங்கோபங்கொண்டு கண்டகண்ட விடங்களிற் பாம்பினைக்கொல்லும் பெரியவிரத மேற்கொண்டான்.

இவ்வாறு மேற்கொண்டு பல்லாயிரம் பாம்புகளைக்கொன்றுவருஞ் சமயத் தில் ஒருநாள் புற்றடியிற் பெரும்பாம்பொன் றிருக்கக்கண்டான். உரூரவன் அதைக்கண்டவுடன் மிகவிரைவாயோடித் தன்கைப்பற்றியிருந்த தண்டா லதைக் கொல்லவோச்சவே, அது அரிகரி! கோவிந்தா! பரந்தாமா! சர்ப்ப சயனு என் றோலமிட்டது. அதைக்கண்டு அதிசயமடைந்து, நாகமே நீயேன் நாகசயனனை நினைந்தாயென, அதற்கு அப்பாம்பு சொல்லுகின்றது. அருமறை வல்ல அந்தணர்கட்கிறையே! யானே ஒருகுற்றமும் செய்திலேன்! என்னை யும் காரணமில்லாமலுங் கொல்லவந்தீர்! அவ்வடிக்குத் தப்பிப்பிழைக்க என் னுற்கூடிய தந்திரஞ்செய்தும் முற்றுப்பெறவில்லை!ஆகையால் இத்தருணத்தில் எல்லாமாயல்லவுமான இறைவனை நினைந்தேன் என்றுசொல்லிப் பின்னுஞ் சொல்லுகின்றது. ஐயா! 'நீர் தவஞ்செய்வார்தங் கருமஞ்செய்வார்' என்ற படி தவமேற்கொள்ளாமல் கொலைமேற்கொண்ட காரணமென்ன? என அத ற்கு அம்முனிவன் கூறுகின்றான். என்மனைவியை ஒருநாகங்கொன்றது. அது பற்றி ஒருகுலத்திலொருவன் குற்றஞ்செய்தால் அக்குற்ற மக்குலமுழுதுமே ற்கு மென்பதுகொண்டு இவ்வாறு செய்துவருகின்றே னென்றான். அத்த ருணத்தில் பாம்பு தன்னுருவநீங்கி காவி, காம்பர, தண்டு, கமண்டலதாரியாய் எதிரே ஒருமுனிவன்போல் தோன்றிற்று. அதனை உரூரவன்கண்டு அதிசயம டைந்து நிற்க அம்முனிவன்உரூரவனை வணங்கினன். உரூரவனும் அம்முனி வனை வணங்கிப் பின்பொருவரையொருவர் தழுவிக்கொண்டு நின்றார்கள். பின் னர் உரூரவன் அம்முனிவனைநோக்கித் தற்செயலாய் இங்குவந்த நீர்யாவர்? உமது வரலாற்றை யெடுத்துச்சொல்லுமென முனிவன் கூறுகின்றான். உரூ ரவரே! நானே மறைகள் எடுத்துக்கூறிய நாற்குலத்து மேற்குலத்துப் பிறந் துள்ளேன். எனக்கு ஆயிரபாதனென்றுபெயர். நான் ஒருகாட்டை யணுகி அங்கு அருந்தவஞ் செய்திருந்த முனிவரொருவரைக்கிட்டி ஒரு துரும்பைக் கிள்ளி அவர்மே லெறிந்து பாம்பு! பாம்பு! என்று அவரைப் பரிகாசஞ்செய் தேன்! அவர் 'குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி, கணமேயுங் காத்த லரிது? என்றபடி என்னைச்சினந்து நீயப்பாம்பாருகவெனக்கடுஞ்சாபங் கொண் டேன்,அவரைவணங்கிஎந்தாய்! என்பிழைபொறுமென்றுவிண்டேன்,அதுநின் தரிசனமாத்திரத்தால் நீங்குமென்றதனுல் உன்னைக்கண்டேன், அதனையின்று

விண்டேன், இதுதான் என்வரலாறென்றுங்கூறி மீண்டுங்கூறுகின்றான், இது வினக்குரிய ஒழுக்கமேயன்று, அதனைவிட்டு இக்கோலமேற்கொண்டாலும்; பாம்பினமோ இம்மூவுலகங்களிலும் பரம்பியிருக்கின்றன. அவற்றைக்கொல்ல உம்மால் முற்றுப் பெறமாட்டா;பாம்பினங்கட்கே அவற்றைப்பெற்ற தாயாகிய கத்துருவென்பவள் சந்திரவமிசத்தில் தோன்றும் ஜெனமேஜய னென்னும் அரசர் பெருமான் செய்யும் சர்ப்பயாகத்தினு லிறக்கச் சாபமிட்டிருக்கின்றாள். அதற்குள் நீரோன்வீண்வருத்த மேற்கொண்டீரென உரூரவனுந் தன்மனைவி யோடு விடைபெற்றுந் தன் ஆச்சிரமமே போய்ச்சேர்ந்தான். இவ்வாறே ஒரு குலத்தில் ஒருவன் தீங்குசெய்தால் அக்குலமுழுதுஞ் சாருமென உதங்கன் சொல்லிமுடித்தான். இதுநிற்க ; ஜெனமேஜய மகாராஜன் எவ்வாறு பாம்பி னங்கட்குப் பெற்றதாயினால் சாபமுண்டாயிற்று எனக்கேட்க வைசம்பாயனர் சொல்லுகின்றார்.

## கருடன்கதை

நிலவுலகைப் புரக்கு நிருபனே ! தவஞ்செய்வாரிற் சிறந்த காசிபமுனிவ னுக்கு மனைவியர் பதின்மூவருண்டு. அவருள் விநதையென்றும்,கத்துருவென் றும் பெயருள்ள இருவரும் "மக்கட்பேற்றிற் பெறும்பேறில்லை." என்றபடி மக்களைப் பெறுவான் முயன்று தங்கணவனை நோக்கி யருந்தவஞ்செய்தனர். அவர்கள் அவ்வாறு தவஞ்செய்தவிடம் கந்தமாதனகிரி யென்பர். இவர்கள் தம்மைநோக்கி அருந்தவஞ்செய்வதை உணர்ந்த காசிபமுனிவர் அவ்விருவருக் கும் கட்புலனுக்குத்தோன்றி உங்கள் கருத்தென்ன வென்று வினவ, அவருள் விநதையென்பவள் வணங்கி, இறைவனே ! ஒருவராலும் வெல்லற்கரிதாகிய வல்லமைமிக்க இரண்டு குமாரரை யான்பெற்றிடவரந்தருவையெனக் கேட்டனள் ; கத்துருவும் அவ்வாறே எனக்கும் சிறந்தவல்லமையுள்ள நூற்று நான்கு புத்திரரையும், ஒருபுத்திரியையும் பெறவேண்டுகின்றேனென இவ் விருவர் கருத்தையும் முற்றுவிக்க வேணப் புத்திரகாமேட்டி என்னும் யாகஞ்செய்து அதிற்கிடைத்த பிண்டத்தை அவ்விருவருக்கும் கொடுத்துச் சான் முன்போலவே அக்கந்தமாதனவரையிற் றவஞ்செய்திருந்தனர். இது நிற்க:—அம்மாத ரிருவரும்கருக்கொண்டுதாங்கள்எண்ணிக்கேட்டபடிவிநதை என்பவள் வெகுகாலமானபின்னர் இரண்டு முட்டைகளையும், கத்துரு என்ப வள் நூற்றைந்து முட்டைகளையும் பெற்றனர். இவற்றில் கத்துரு வீன்றமுட் டைகள் ஐந்நூறுவருஷம்சென்றபின்னர் தாமேவிரிந்து அவைகளினின்றும்ஆதி சேஷன், வாசுகி,தக்ஷகன்,கார்க்கோடகன், முதலியநாகராசர்நூற்றுநால்வரும், சலர்க்காரை யென்னும் ஒருமாதுந் தோன்றினர். இவர்களைக்கண்ணும் மனமு மகிழவளர்த்துவந்தாள் கத்துருவையென்னுங் காமர்வல்லிக்கொடிபோல்வாள். அம்மைந்தர் சகல கலாபாரங்கதராயு மிக்கவல்லமையுடையராயு மிருப்பதை விநதையென்பவள் கண்ணுற்று மனம்பொறாது தானீன்ற முட்டைகள்இருந்த வண்ணமே யிருக்கக்கண்டு;இதென்ன அதிசயம் ! வைத்தவண்ணமேஇவைகள் இருக்கின்றனவேயென்றுபொருமி யொன்றை யுடைத்தாள். அம்முட்டையில்

எல்லாவுறுப்புங்கூடிக் காலொன்றுங் கூடாமல் ஒருமைந்தன் தோன்றினன், அவ்வாறு தோன்றினோன் தன்தாயை மும்முறைவணங்கி அன்னாய்! உறுப் பெல்லாங்கூடிவருகின்ற சமயத்தில் ஆத்திரமாய் முட்டையை யுடைத்து விட்டாய். ஐயோ! யான்மிக்க ஆற்றலுடையவனா யிருந்தும் பிறரால் நிந்திக் கப்படும் முடத்தன்மையுடையனானேன்; ஆதலின் நீ உனக்கிளையவளுக்குக் குற்றேவல் செய்பவளாதி யெனக் கடுஞ்சாப மிட்டான். இச்சாபமேற்ற விந தையென்பாள் சஞ்சலப்பட்டு வருத்தமுற்று புத்திராபேக்ஷைக்கு வருந்தி 'ஆத்திரக்காரருக்குப் புத்திமட்டு, என்றபடி நம்பால் பிரத்தியக்ஷமாயிற்றே யென்றுதன்னைத்தான் நிந்தித்துக்கொண்டு நின்றதாயைநோக்கிஅம்மே! நீயஞ் சாதை,என்னைப் பின்னப்படுத்தினமை நோக்கிக் கோபத்தாற் கடுஞ்சாபமிட் டேன்.இச்சாபநீங்க மறுசாபங்கொடுக்கின்றேன். அஃதென்னவெனின் இதோ விருக்கிறமுட்டையில்எனக்கிளையவனிருக்கின்றான். அவனே மிக்கபேராற்றலை யுடையனா யிருப்பான். அவனால் நின்சாபம் நீங்கப்பெற்று மகிழ்சிறந்தவளாதி யென மறுசாபங்கூறி;என்னைச்செய்தவாறு அம்முட்டையையும் செய்யாதை யென வற்புறுத்தினன். பின்னர் விநதையென்பவள் அருணனெனத் தன்மக னுக்குப் பேரிட்டு நாளொருமேனியும், பொழுதொருவண்ணமுமாக வளர்த்து வந்தாள். கிரகங்களிற் சிறந்த பரிதியங் கடவுளாகிய சூரியபகவான் இவன் அசுவவிருதய முணருந் தகைமையிற் சிறந்திருப்பதைக் கேள்விப்பட்டு இவனையணுகி அருணா! நீஎன் ஒற்றையுருளையும், சப்தா என்னும் குதிரையும் பூண்ட தேரைச்செலுத்தவல்லபாகனாகவேண்டுமென்ன..[illegible]அவனும அவ் வாறு அமைந்துபோயினன். பின்னர் விநதையும் முன்மூத்தமைந்தன்சொன்ன வண்ணம் மறுமுட்டையைக் காத்துவந்தாள். இங்ஙனமாக, தேவருலகில்கற்ப தரு நிழலில் இருந்து அரசுரி[illegible]மேற்கொண்ட வச்சிரப்படையுடைய இந்தி ரன் நரை, திரை, மூப்பு, பிணி என்னுமிவைகள் இடையறா திருக்கக்கருதி முப்பத்துமுக்கோடி தேவரும், நாற்பத்தெண்ணாயிர முனிவரும், மற்றைப்பரி சனங்களும் தம்மைச் சூழ்ந்துவர வைகுந்த மடைந்து சுதரிசனமென்னும் சக்கரம், பாஞ்சசன்னியமென்னும் சங்கு, சார்ங்கமென்னும் வில், கௌமோ தகி என்னும் கதை, நாந்தகம் என்னும் வாள் ஆகிய ஐம்படையையுமுடைய இறைவனைக்கண்டு அன்பர்க் கெளியாய்! அருட்பெருங் கடலேஎனத்துதித்து நிற்க, நெடுமால் மிக்க அன்புகூர்ந்து நீ எண்ணியவெண்ண மென்னவென்று கேட்க, இறைவனே நரை, திரை,மூப்பு முதலியன நாங்கள் எய்தாவண்ணம் கருணைசெய்ய வேண்டுமெனக்கேட்கவே, இந்திரனை நோக்கி உபேந்திரனாகிய திருமால் கூறுவாராயினர். நீ மேற்கொண்ட கருத்திற்குத் திருப்பாற்கடலைக் கடைந்தால் அமுதமெழும், அவ்வமுதம் புசித்தால் நரை,திரை, மூப்பென்று கூறப்படுபவை எவ்வளவும் அணுகமாட்டா; அதற்கு உங்களில் யாவரோனும் மந்தரகிரியைக் கொண்டுவந்தால் அதனை மத்தாகக்கொண்டு திருப்பாற் கடலைக் கடையலாமென்று திருவாய்மலர்ந்தருளினர். இந்திரன் முதலா னோர் இதைச்செவியுற்று மந்தர கிரியோ சிறிதேயன்று, மிகப்பெரிதாமன்றோ, அதைக்கொண்டுவர வல்லார் யாவரிருக்கின்றனரென மனக்கலக்கமுற் திரு

ப்பதைக்கத்துரு மக்களிற்சிறந்தானும்,கல்விகேள்விகளில்வல்லானும், 'சென்ரூற் குடையாமிருந்தாற்சிங்காதனமாம்' எனப்பெரியார் அருளிச்செயல்வண்ணம், திருப்பாயலாயும் குடையாயும் ஆதனமாயும் இறைவனை, உலகுண்டகரவனை, பிறவிப்பிணியில்வருந்துவாருக்குமறவனை, ஆலடையிருந்த அறவனை, அருமறைதுணிந்த ஒருவனைப்பிரியாமற் குற்றேவல்செய்யு மதிவாளனுமாகிய ஆதிசேடன் மாகந்தொழும்ஆகண்டலனைநோக்கி நானேவிரைவிற்சென்று அம்மலையைக் கொணரவல்லேன், வருந்தத வேண்டா என அவ்விந்திரனிடத்து விடைகொண்டேகி அம்மந்தரகிரியை வேரொடும்பறித்துக்கொண்டுவந்தான்.

இதைக்கண்ட இந்திரன்முதலிய இறையவர்யாவரும் ஆதிசேடன் புயவலியைநோக்கிக் கழிபேருவகையெய்தி உலகமுண்டபெருவாயனை, ஆழ்கடலிற் கண்வளருமாயனை, அன்பர்கட்கென்றும் சகாயனைப்பலதரம் பரவிப்பணிந்து அடியோங்கட்கு அமுதம்பாலியும் என்று வேண்டிக்கொண்டனர்.

உடனே அருமறைதுணிந்த பரம்பொருளாகியமாயோன்திருப்பாற்கடலேயணைந்து மந்தரகிரியைமத்தாக்கி, ஆதிசேடனுக்கிளவலாகிய வாசுகியைத்தாம்பாகப்பிணித்து ஒருபுறத்தேயசுரரும், ஒருபுறத்தே தேவருமாக அத்தாம்பைப்பற்றிக் கடையக் கட்டளையிட்டனன். அக்கட்டளையை மேற்கொண்டு அவ்வாறு இருதிறத்தாருங் கடையவே தாம்பாகப் பிணிக்கப்பட்ட வாசுகி வருந்தி விஷங்கான்றான். அவ்விஷம்வடவைத் தீப்போற்சீறியாவரையும் நீறுக்கத்தோன்றிற்று. அதனைக்கண்ணுற்ற இந்திரன்முதலிய தேவர்கள்நடுநடுங்கிப் பதைபதைத்து உடல்வெயர்த்து நாமினிச்செய்வதுஎன்னென்று ஏங்கி இக்காலபாலத்திருக்கழலையுடைய பரம்பொருளல்லதுநமக்குப் புகலிடம்வேறில்லையெனத்துணிந்து அரகரசிவசிவவென்னு முழக்கொடுகருணைக்கடலாகிய பரமசிவனைத்துதித்துநிற்க, அடியார்க்கெளியானுகிய சிவபிரான் அவ்வாலவிடமுண்டு அமரர்கள் இடுக்கண்தவிர்த்துத் தமதிருக்கையாகிய திருக்கயிலைக்கெழுந்தருளினர்.

பின்னர் தேவர்கள் ஆனந்தக்கடலிலழுந்து முனைப்பாலக்கடையவே,சங்கநிதி, பதுமநிதி, காமதேனு, கற்பகம், அயிராவதம், உச்சைசிரவம், சிந்தாமணி, மதிக்கடவுள், கவுத்துவமணி, அயிராணி, இலக்குமி, இரதி, அகலிகை, அறுபதினுயிரம் அரமகளிர், இன்னமுதலியஎல்லாப்பொருளுந்தோன்றின; அதன் பின்னர் அமுதமுந்தோன்றிற்று. அமுதங்கண்டவுடன்தேவர்கள் அனைவரும் பெருமகிழ்ச்சியடைந்து திருமாலைவணங்கித்துதித்து நின்றனர். திருமால்பாற்கடலில்தோன்றிய பொருள்கள்அனைத்தையுநோக்கி இரதியைமன்மதனுக்கும், சங்கநிதி, பதுமநிதி, காமதேனு, கற்பகம், அயிராவதம், உச்சைசிரவம், அயிராணி, அரமகளிர், சிந்தாமணி இப்பொருள்களை இந்திரனுக்கும், அகலிகையைக் கவுதமனுக்கும்கொடுத்து, இலக்குமியையும், கவுத்துவமணியையும்தனக்குரியனவாகக்கொண்டு அவ்வமுதம்பகிர்ந்துகொடுக்கக்கருதித்தமக்குள் ஒரு சூழ்ச்சியை நினைக்கலாயினர்.

அங்ஙீயாதெனின் அசுரரோ இயற்கையிலேயே கொடுஞ் செய்கையும், பேராற்றலுமுடையவர். நரை, திரை, மூப்பு, சாக்காடு இவற்றைத்தவிர்ப்பதாகிய அமுதமுமுண்பாராயின் தீயின்கண்நெய்பெய்தாற்போன்று மிக்கதுர்ச்செய்கை செய்வதிலேபின்வாங்கார். உலகம்பெருந்துயர் அடையும் என்பதிற் சந்தேகமென்பதேயில்லையென்று தீர்க்காலோசனைசெய்துதமது அமிசத்தினின்றும் மோகினியுண்டாக நினைத்தாரென்பதே.

இவ்வாறுதோன்ற நினைத்தவுடனே அவள் சுராசுரரிடையேவரக்கண்டு இதென்ன? மண்,விண்,பாதலமென்னும் மூவுலகத்திலும் இவ்வகைப்பட்டதோருருவமும்ஒருநாளுங்கண்டதில்லையே! அழகென்பது ஓர்படிவங்கொண்டு படிமிசைவந்தாற்போலிருக்கின்றதே; அம்ம! அம்ம! என்று அதிசயமிக்கெய்தித்திப்பிரமையடைந்து நின்றனர். இவருள் தேவர்கள் இதுகாவற்றொழிற் கடவுளாகிய மாயோன்மாயமேயாம். இனியொருகணப்போழ்தில் அனைத்தும் வெட்டவெளியாமென்று தமதுநெஞ்சினைக் காமநெறியொழுகாவண்ணம் அடக்கிநின்றனர். யானைகண்ட குருடரேபோல தாம்தாம் எவ்வெவ்வவயவங்கண்டு நின்றனரோ அவ்வவ்வவயவங்கண்டு நின்று ஆங்குச்சித்திரப் பிரதிமையேபோல அசுரர் நின்றிருந்தனர்.

அப்போது கபடநாடகனாகிய பரமபுருஷன்தேவாசுரரைக் கண்ணுற்று அமிழ்தம்பகிர்ந்தளிக்க ஒருவர்வேண்டுமே! இந்நின்றமாதைப்பகிர்ந் தளிக்கக் கட்டளையிடுகின்றேன், உஸ்ணுங்கோளென்றுவள்ள மொன்றும் கரண்டியொன்றுங்கொடுத்து இவ்வமுதினையாவருக்கும் வழங்குகவென்றுகட்டளையிட்டனர். அவள் அக்கட்டளையை மேற்கொண்டுதேவர்களுக்கு அமுதம்பகிர்ந்துகொடுத்தும் அசுரரைத் தன்மாயாவிலாசமயக்கத்தில் ஆழச்செய்துநின்றாள். இவ்வண்ணஞ்செய்கையில் ஆதிசேடன்பின்வந்தோருள் இருவர்பந்தியில்வஞ்சனை செய்வதுமுண்டா! நியாயவாயிலாகயாவரும் அரிதின்முயன்று தேடியபொருள்யாவருமன்றே அனுபவிக்கவேண்டும். அவ்வாறுபயன்படாமல் விரல்நீக்கிமோர்குடிப்பார்போல வருந்திக்கடைந்தநம்மையும், அசுரரையும்விலக்கித் தேவர்கள்மாத்திரம் அமிழ்தமுண்பானேன்என்று தம்முள்நினைந்து இனிநாம் சும்மா இருப்பது தகுதியன்றென்று தேவர்களைப்போல வடிவங்கொண்டு தேவர்கள் வரிசையில் ஓர்புறம்சென்றிருந்தனர்.

இம்மோகினியோ இவரையும் தேவரேயாமென்றுகருதி அமிழ்தம்பகிர்ந்து அளித்தாள். உடனே அவர்கள் அசுசியாய் அதனையுட்கொண்டனர். அதை யருகிலிருந்த சூரியசந்திரர் இருவரும்கண்டு திப்பிரமைகொண்டு இவர்கள்உருவத்தால் தேவரேயாகத்தோன்றினும், செயலால் அசுரரேபோலத் தோன்றுகின்றனர் என்று சைகைசெய்துநின்றனர். அதைக்கண்டமோகினித்தெரிவை தன்கையிற்பிடித்திருந்தகரண்டியால்மண்டைபிளக்கப்புடைத்துத்தேவர் கூட்டத்திற்குப்பகிர்ந்துகொடுத்தாள். தேவர்களோ திருவெட்டெழுத்தேவடிவாகவுடைய புருஷோத்தமனைத் தியானித்து அவ்வமுதையுட்கொண்டன ராகிப் பேரானந்தக்கடலில் அழுந்தினர். இதுநிற்க; மாறுவடிவங் கொண்டு அமுத

நுகர்ந்த இருவரும் சூரியசந்திரராலன்றோ நமக்கு இக்கேடு நேர்ந்தது ; இவர்களை இலேசில்விடப்படாதெனத் துணிந்து, ஒன்றாயுலகனைத்துமான பரமசிவனைநோக்கி அருந்தவஞ்செய்து அவனருளால் ஒருவன் சூரியனையும், மற்றொருவன் சந்திரனையும் பற்றிவிழுங்குவதும் கான்றுவருவதுமாகியசெய்கையைச் செய்துவருவாராயினர். அச்செயலைத்தான் இன்றுவரையும் சூரியகிரகணமென்றும் ; சந்திரகிரகணமென்றும் உலகிற்சொல்லப்பட்டு வருகின்றது. அம்மாறுவேடம்பூண்ட இருவருமே இராகு, கேதுக்கள்என்றுசொல்லப்படுபவர். பின்னர்எஞ்சியவமுதத்தை ஒருபொற்குடத்தில் இட்டுத் தேவலோகத்திலேவைத்துத்திவ்யாஸ்திரங்களையும், தேவர்களையும் அதற்குக் காவலாக்கித் திருமால் அமுதமுண்டதேவரைத் தமதிருக்கைக்குச் செல்லக் கட்டளையிட்டுத்தாமும் தமதிருக்கையினைநாடினர். மோகினி தன்னுருவமுங் கரந்தாள்.

இனி அசுரரோ 'வாய்த்தவிடும்போய் அடுப்புநெருப்பும்போய்விட்டது' என்றபழமொழிப்படி அமுதையுமிழந்துமோகினியையநோக்கி இளித்தவாயினையுடையாராய் யாதொருபயனுமெய்தாமல் ஏமாந்து அடடா! மோசமெய்தினோமே. திருமால்முதலிய தேவர்கள்நம்மைமயக்கி அமுதங்கொடாமற் போய் விட்டனரோ என்று மிகச்சினங்கொண்டுஒருங்குதிரண்டுதேவர்கள் மேற்படையெடுங்கோளென்று பொன்னுலகையடைந்து யுத்தஞ்செய்யத் தொடர்ந்தனர்.

இதைத்திருமாலும் பிரமனுமுணர்ந்து கடுகிப்படர்ந்து அசுரநாசஞ்செய்யவே இறந்தவரொழிய எஞ்சிய அசுரரும்பயந்து இனியிருந்தால்நமக்கும் கேடு வருவதுதிண்ணமென்று பாதாள லோகமேசென்று ஒடுங்கியிருந்தனர். இவ்வாறிருக்க, திருமறுமார்பன்கருணையால் திருப்பாற்கடலினின்றுந்தோன்றி இந்திரனையடைந்துள்ள அயிராவதம், உச்சைசிரவமென்பவற்றுள் உச்சைசிரவமென்னும் வெள்ளைகுதிரை ஒருநாள் கடலோரமாக வந்திருந்தது. அதுபோழ்து ஆதிசேஷன்முதலாகிய சருப்பராசர்களையீன்றகத்துருவும், அருணனையீன்ற விநுதையும்வேடிக்கைபார்க்கவந்து அக்குதிரையைக் கண்டார்கள். கண்ட இருவருள்விநுதையென்பவள் தங்காய்! புண்ணியம் பழுத்தோர் புகழேபோல இக்குதிரைவெள்ளைவெளேலென்றிருக்கின்றதேயென்றனள். கத்துருவோ இக்குதிரைக்குவாற்புறத்தின்மாத்திரஞ் சற்றுக்கறுப்புளதென்றனள். விநுதையோ இன்மையை யுண்மைபோலேன் சொல்லுகின்றனை ? நன்றாகப் பாரென்றுசொல்லவே கத்துருவைதமக்கையைநோக்கிஅவ்வாறுகறுப்புளதேல் நீஎனக்கு அடிமையாதியென்றும்,கறுப்பிலதேல் யானுனக்கடிமையாகின்றேன் என்றும் சம்மதித்துக்கொண்டு அக்குதிரையைப்பார்ப்போம் வாவென்றுஒருவரையொருவர் அழைக்கப்போய்ச்சென்று காணும் சமையத்தில் கத்துருவை தமக்காய்! நாம்வந்துநெடும்போதாயிற்று, நாளைவந்து பார்ப்போமென்று கூறவே இருவரும் தமதிருக்கையை நாடிச்சென்றனர்.

இவ்விருவருள் கத்துருதன்மனைக்குச்சென்றவுடனே தனமக்களைக்கூவி என்மக்களே! நானும் என் தமக்கையும் சபதஞ் செய்துகொண்டோம். அது உச்சைசிரவமென்னும் வெள்ளைக்குதிரைக்கு வாற்புறத்திற் கறுப்புண்டென்

பதே! என் வார்த்தை பழுதாகாவண்ணம் நீவிர் அக்குதிரையின் வாற்புறத்திற் சற்றுக்கறுப்புண்டாக்குங்கோள். அவ்வாறுசெய்விரேல் என்தமக்கை என் தொழுத்தையாவளென ஆதிசேடன்முதலியோர் எங்களையீன்ற பெருங்கற்புத்தெய்வமே, அக்குதிரையோ பாற்கடலிற்றோன்றியது, அதற்குச் சிறிதேனு மறுவுண்டென்பதே கூறவொண்ணாது, அதற்குமறுவுளதாக்கின் நாங்கள் பெருங்கேடு அடைவோம். பின்னரும்பெற்றதாயினிடத்தோ கற்றவித்தையைக் காட்டுவது என்பதாகும். இவ்வகைப்பட்டசெயற்குடன் படோமென்றனர்.

அதுகேட்டுக் கத்துருசினங்கொண்டு நீவிர்எல்லாம் இனிச்சந்திர குலத்தரசனாகிய ஜெனமேஜெயமகாராசன்செய்யும் சர்ப்பயாகத்தின்மடியக்கடவீரெனக்கடுஞ்சாபமிட்டனள். இதைக்கேட்ட அவள் மக்களுள் ஒருவன் அக்குதிரையின் வாற்புறத்திற் சற்றேகறுப்புத்தோன்ற ஒன்றியிருந்தான். மறுநாள்கத்துருவும் விநுதையும் கடலோரத்திலிருந்த அக்குதிரையினைக்கண்டனர். கண்டாங்கு அக்குதிரையின்வாற்புறத்திற் சற்றேகறுப்பிருக்கக்கண்டு சங்கேதப்படி தன்தங்கைக்குத்தொழுத்தையாகி அவளிட்டகுற்றேவலைச் செய்தொழுகுவாளாயினள்.

இவ்வாறொழுகிவருநாளின்று விநுதை யுயிர்த்தமுட்டையில் அருணனையொழிந்தமற்றொன்று பருவம்நேர்ந்துவிரிந்தது. விரிந்தாங்கு அதினின்றும் அழகின்மிக்கசிறகினையும், பேராற்றலையும், இளஞாயிறுபோன்ற மேனியையும் எய்தி இரணியனறைந்த தூணின்கண் அவனைக்கொல்லத்தோன்றிய அழகிய சிங்கன்போல ஒருமைந்தன் தோன்றினான். அம்மைந்தன்தோன்றினவுடன் வானிற்பறந்துதன்தாயையை யோடோடியும்வந்து வணங்கிநிற்கவே தாயாகிய விநுதையும் இன்றன்றோ பெண்பிறப்பெய்திய பயன்பெற்றேனென்று கண்ணுமனமுங்களிப்பெய்த ஆனந்தக்கடலிலாழ்ந்தாள். கத்துருவோ இம்மைந்தன் பேராற்றலையும் அழகினையுங்கண்டுமக்கட்செல்வம் பெற்றால் இவ்வாறன்றோ பெறவேண்டும். 'புன்றிபலநூட்டி. பயந்தனாலேதுபயன்' என்றபடி நாம்பல மைந்தரைப்பெற்றதனாலென்னபயன்! என்று மனநொந்து அம்மைந்தனைநோக்கி ஒருமொழிகூறுகின்றாள், கலுழா நீ என் தொழுத்தை மகனாதலின் என் மைந்தர்க்குங் குற்றேவல்செய்தொழுகென அதற்கு அவனேர்ந்து அவ்வாறு ஒழுகுவானாயினான்.

இவன்செய்யுங் குற்றேவல்யாதெனின் ஆதிசேடன்முதலிய நூற்றுநால்வரையும் தீவாந்திரங்களில் எடுத்துச்சென்று ஆங்குள்ள விநோதக்காட்சிகளையும், இமயமலை, மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், கந்தமாதனம், நீலகிரி முதலாயமலையலங்காரங்களையும் காட்டிவருவதுவே. இவ்வாறு தன்தாயிடம் வந்துவணங்கி அம்மே! என்னை யான் எஞ்ஞான்றும் ஆதிசேஷன் முதலானோரைச் சுமந்துவருவதனால் காலங்கழிவதாயிருக்கின்றது. என்னுடைய பேராற்றல் உலகமுண்டபெருவாயானாகியஉலப்பில்சீர்த்தியம்மானாகியஇறைவன் ஒருவனேயறிவான், மற்றொருவராலுமுணரவொண்ணாது.

அத்துணையாற்றலேயடைந்தும் "அவையஞ்சிமெய்விதிர்ப்பார் கல்வியும் கல்லார், அவையஞ்சா வாகுலச்சொல்லும், நவையஞ்சி-யீந்துண்ணூர் செல்வமும் நல்கூர்ந்தாரின்னலமும், பூத்தலிற்பூவாமைநன்று" என்றபடி எனக்குக் குற்றேவல் செய்யத் தக்காரிடத்தேயான் குற்றேவல் செய்பவளுகி மற்போராற் காய்ப்பேறுந்தோளில் ஆதிசேஷன்முதலானோரைச் சுமந்துகாய்ப்பேறலாயிற்றே. இதைச்சிந்திக்குந்தோறும் என்மனம்புழுங்குகின்றதே! என்செய்வேன்! யாரிடத்திற்போய் முறையிடுவேன். இதுவும் அயன் என்தலையி லெழுதிய எழுத்தோ, இதுநிற்க; நீபடுகின்றதுயரம் பார்த்தாலும் என்மனம் பகீரென்கின்றதே, அக்கத்துருவுக்கு நீ இயல்பாக அடிமையாயினையோ அல்லதுவேறு காரணத்தால் ஆயினையோ உள்ளவாறு விரித்துரைக்க வேண்டுமென்று வேண்டிக்கேட்டமகனைநோக்கி அழலிடைப்பட்டமெழுகுபோன் மனமுருகிச் சொலவாளாயினள்.

அடாகுழந்தாய்! தக்கப்பிரசாபதி புதல்வியர்பதின்மூவரும் காசிபருக்கு மனைவியராயினர். அவருள் இக்கத்துருவுக்குநான் தமக்கை; உன்தமையனுகிய அருணனிட்டசாபத்தினுல இவட்குத்தொழுத்தையாயினேன்; அது அவ்வருணன் இருந்தமுட்டையைப் பருவமாகாதமுன்னரேயுடைத்தேன், அப்போது உன்தமையனுக்கு எல்லாவுறுப்புங்கூடிக்கான்மாத்திரம கூடாமலிருந்தது, அதனுல் அவன்சினந்து என்தங்கைக்குத் தொழுத்தையாகெனச் சாபமிட்டான். அச்சாபத்திற்கு வருந்தாமல் அவயவப்பழுதைநோக்கிக் கலுழ்ந்தேன. அதனைநோக்கி இச்சாபம் என்னிளையவனுல்நீங்குமென்று பிரதிசாபமிட்டுத்தான் சூரியனுக்கு இரதசாரதியானுன். இதுதான் என்வாலாறு என்று விளங்கக்கூறினுள். அவ்வாறுகூறக்கேட்டு விடைபெற்று முன்போன்று ஆதிசேடன்முதலானோர்க்குக் குற்றேவல்செய்தொழுகுகையில்ஒருநாள் அவர்கள் கலுழா! மாலிபமலே மிக அதிசயமுடைத்தெனக்கேள்வி. ஆதலால் பார்க்க அவாவுளதுஎன,' அதற்குக்கலுழனும், நன்று! வாருங்கோள் காண்பிப்பேன் என்றுகொணர்ந்து சென்றுகாட்டி அவர் அவாவைவீட்டித்தான் அவர்களை விட்டு அம்மலேச்செறிவில் ஒருபுறத்தேநின்று இதென்னவிதிவசம! கத்துருவோ அடிக்கடி சற்றேனும் இரக்கமென்பது அணுத்துணையுமின்றி வேலேயிடுகின்றனளே! அஃதிருக்கட்டும், அவள்மக்களாகிய காத்திரமேவயரோமிக்க அறிவுடையார்கள்; அவருள் ஆதிசேட்னேமிகப்பண்டிதசிரோமணியன்றே! உலகில் அவனுடன் சரிவரக்கற்றோர்பிறரில்லேயே. அவ்வாறிருந்தும் நிரம்பக்கடூரமானகுற்றேவல்செய்விக்கின்றனனே. அல்லது நமதுபேராற்றலால் வெற்றிகொள்வோமெனின் தாய்சொல்குறைவடைகின்றதே. உலகமோ 'தாயிற்சிறந்தொரு கோயிலுமில்லே' என்றதனுல் தாய்சொல்லேத்திரஸ்கரிக்கப் படாதே! இதற்கென்னசெய்கேன், யார்பாற்சென்று முறையிடுவேன் என்றுதனக்குள்ளேதான் அழலிடைப்பட்டமெழுகது போலவாடி அருட்பெருங்கடலேநாடி அவன் ஆயிரநாமம்பாடி அவன்திருவடித்துணையே தஞ்சமென்று கூடிநின்றுன். அத்தருணத்தில் நாரதபகவான்எழுந்தருளினுர். அதுகண்டு இவர்

யாரோ மகானுபாவனென்று வணங்க, அவர் அப்பா உன்னைத்தெரிசிப்பவருக்கேதுன்பமென்பது அணுத்துணையுநேராதே! நீவருந்துவானேன் என்றனர். அதற்குக் கலுழன் தன்மாதாவுக்குத்தன்தமையனிட்டசாபமும், அந்தச்சாப நேர்ந்தவாறுங்கூறிப் பின்னுங்கூறுகின்றான்.

ஐயா! உச்சைசிரவமென்னும் குதிரைக்குவாற்புறத்திற் கறுப்புண்டோ சொல்லுமென்றனன். நாரதமுனிவர் அக்குதிரைவெறும் வெண்மை நிறைமே யுள்ளது. அதன்வாற்புறத்துக்கறுப்புண்டானது உன்சிற்றன்னை செய்தசதியல்லது இத்ததியில்வேறுகாணேன்என்றுஅதனைவிரிவாயெடுத்துப்பேசிமறைந்தருளினர். இவ்வாறுநிகழ்கையில் விநோதம்பார்க்கச்சென்ற கத்துருமக்களாகிய காத்தவேயருமீண்டனர். இவர்களைமுன்போலவே யெடுத்துவந்து இருப்பிடத்திற்சேர்த்தான். இவ்வாறுநிகழ்கையில் கலுழனும் இவர்கள்செய்யும் கொடுந்தொழிலைக்கண்ணுற்றுநமது பேராற்றலைக்காட்டினுல் அல்லது நம்பால் பயந்து குற்றேவல் இட அஞ்சாரென்பதுணர்ந்து அதற்குக்காலம் பார்த்துக் கொண்டேயிருந்தான். ஒருநாள்காத்தவேயராகிய ஆதிசேடன்முதலானோர் கடல்புடைசூழ்ந்தகாசினிமுழுதுங்கண்டோம். இனிவானின்கணுள்ள வாயுமண்டலம், சந்திரமண்டலம், அக்கினிமண்டலம், சூரியமண்டல முதலியவைகளைப்பார்க்கவேண்டும், எங்களுக்குக் காட்டுகென்றுவேண்ட அவ்வாறே காட்டுகின்றேனென்று கேசரிமார்க்கத்தில் அவர்களைக்கொண்டுசென்று ஒவ்வொருமண்டலமாகக் காட்டிப்பரிதிமண்டலந்தாவினன். தாவவேஆதிசேடன் முதலானோர் அச்சூரியமண்டலத்தின் அழற்சியை ஆற்றாராய்ச்சரீர முழுதுங் கன்றி முகங்குன்றி நெட்டுயிர்ப்பொன்றி யானைதன் தலையில்தானே மண்போட்டுக் கொள்ளுகின்றதுபோல நம்மால்நாமே இத்துன்பந் தேடிக்கொண்டோமே என்று கலுழனைநோக்கி இனிஎங்களால்பொறுக்கமுடியாது, எங்களை யிருப்பிடங்கொண்டு செல்கென்று வேண்டினர். அதைக் கலுழன்கேட்டு இவ்வளவேயோ நுமதாற்றல் என்று பின்னரும் அவர்களைச் சிறிதுதூரம் கொண்டு சென்றுமீட்டும் அவரை யிருக்கையிற்சேர்த்தனன்.

இங்கே வந்துசேர்ந்த ஆதிசேடன்முதலானோர் படுந்துயரநோக்கிய கத்துரு கலுழா! என்மக்களை இவ்வாறுவருத்தினையே என அம்ம! நானென்செய்தேன், அவர்கள் வானிலுள்ள மண்டலங்களையுங் காணவேண்டு மென்றனர். நானும் அவர்கள் கட்டளையின்படி சென்று காட்டினெனென்றான். கத்துரு கேட்டு மனமவருந்தி வருணமந்திரஞ் சபிததுநின்றாள். உடனே மழைபெய்தது. பெய்யவே ஆதிசேடன்முதலானோர் தமக்குச் சூரியமண்டலத்திற் சென்றதனு லுண்டாகிய அழற்சி நீங்கிப் பழையபடிநின்றனர். அதுமுதல் கலுழனைக்கண்டால் சற்று அஞ்சி நடப்பர். இவ்வாறு நிகழ்கையில் ஒருநாள் கலுழன் கத்துருவைநோக்கி அம்ம! இதுஒன்று என்தாயும் நானும் உனக்குக் குற்றேவல்செய்து ஒழுகும் கடைப்பாடுபூண்டு ஒழுகுகின்றோம். இதனை நீக்கிக்கொள்ளக் கருதுகின்றேன். இதற்கு என்ன அருமையான பொருளைக் கேட்பினும் கொணர்ந்து தருகின்றேன். உமது கட்டளையாதென்றான்.

அப்பா! உன் கருத்தின்படி செய்விக்கிறேன்; என் மக்கள் சுகமெய்த நீ விரைவிற்சென்று தேவாமிர்தங் கொண்டுவா போவென்றனள்; அதுகேட்டுக் கலுழன் மிகவு மகிழ்ச்சியடைந்து தன் தாயினிடஞ்சென்று ஓடோடியும் வந்து வணங்கி, அம்மா நான் கத்துருவினிடத்திற்குற்றேவல்செய்வதினின்றும் நீங்க அமுதங்கொணரப்போகின்றேன், கட்டளையாதென, தாயும் அவ்வாறே போய்வாவென உச்சி மோந்து முத்தமிட்டுக் கண்ணினின்றும் ஆனந்தக் கண்ணீர்புரள ஆசீர்வதித்தனுப்பவேமீண்டும்வணங்கி தாயே! என்தந்தையிருக்கின்ற இடமும், என்பசிநோய் நீங்கும்வகையும் எடுத்துச்சொல்லுமென்றான்.

அதற்குத்தாய் மகனே! உன் தாதையாகிய காசிபமுனிவர் இருக்கை கந்தமாதனவரையே யாகும். நீ கொண்ட பசிக்குணவு வடகீழ்த் திசைக்கடலின் மூலையில் ஒரு சிறுதீவுண்டு. அத்தீவில் ஆறலைக்கும் வேடர் அநேகருளர். அவரோ மாபாதகர், அவர்களை அருந்து. அவருள் ஓர் அந்தணன் இருக்கின்றனன். அவனைமாத்திரம் அருந்தாதை யென்று வழியுங்கூறி யனுப்பினள். அதனைக் கேட்ட கலுழன் அம்மா! நான் அவ்வந்தணனை யெவ்வாறு அறிந்துகொள்வது கட்டளையிட வேண்டுமென்று இரந்து வேண்டினன். அவ்வாறறிந்துகேட்ட மகனைநோக்கி அப்பா! நீ விழுங்கும்போது நெஞ்சில் அழற்சியுண்டாகும், அதனையுணர்ந்து நீக்குக என மகனும் மகாபாக்கியமென்று விடைபெற்று அந்தாமார்க்கத்தில் எழும்பிச்சென்று அவ்வேடரனைவரையும் ஒருங்கே வாழைக் கனிபோல் அருந்த இடையே அன்னைசொன்னவண்ணம் நெஞ்சில் அழற்சியுண்டாகக்கண்டு 'தாய்சொற் றுறந்தால் வாசக மில்லை' என்றபடி அவனை வெளியேவரக் கூவினன், அவ்வந்தணன் வெளிவந்தபின் அவன் என்மனைவியையும் வரக் கட்டளையிடுமெனக் கலுழனும் அவ்வாறே வருகவெனக்கான்று அவருக்கு நன்மொழிபுகன்று கந்தமாதனஞ் சேர்ந்தான்.

## கந்தமாதனச் சருக்கம்.

கற்பகமுதலிய ஐந்தருவையு மளாவிய சந்தனம், அகில், பாதிரி, மகிழ், கோங்கு முதலிய விருட்சங்களும், முல்லை, இருவாட்சி, மல்லிகை, செவ்வந்தி, காந்தள் முதலிய கொடிகளும், சிங்கம், யானை, புலி, மான் முதலிய மிருகங்களும், மயில், அசுணம், சக்கரவாகம், கழுகு முதலிய பறவைகளும் அடர்ந்து பரமசிவன் சடைக்கற்றையினின்று இழியும் கங்கைபோல் அருவியாறொழுகப் பெற்று, எல்லாத்தருமங்களுக்கும் பிறப்பிடமாகிய முனிவருக்கிருக்கையாகி விளங்குங்கந்தமாதனமென்னும்மலையொன்றுண்டு. அம்மலையின்சிறப்பனைத்தும் பார்த்துக்கொண்டேவந்து பலமுனிவர்கள்ஆசிரமத்தையும்கண்டு களிப்புற்றுத் தன் பிதாவாகிய காசிபமுனிவர் தவஞ்செய்யுஞ் சூழலையணுகினன். அணுகி அம்முனிவர் பஞ்சேந்திரிய நிக்கிரகஞ்செய்து தவஞ்செயக்கண்டு தலைமுதலிய எட்டுறுப்பு நிலமுறப்பணிந்து நின்றான். உடனே மகன்வரவைக்கண்ட மாதவவரசு கண்ணுமனமுங் களிப்பெய்த வாரித்தழுவி யுச்சிமோந்து முத்தமிட்டு மகனே நீ யென்னிடத்தில் வந்த வரலாறென்னென்று வினவினன்.

அதற்குக் கலுழன் தன் வரலாற்றை முற்றுமொழியாமற்கூறித் தான் அமுதங்கொணரவும், குற்றேவற்றொழில் நீங்கவும், தன்பசி விட்டொழியவும் அருளவேண்டுமென்று வணங்கினான். காசிபமுனிவர் அப்பா நீ அமிதமான வாற்றலையடைந்து அமுதங் கொண்டுவரக்கடவை, இனி உன் பசிப்பிணிநீங்க வும் கூறுகின்றேன். அதாவது, அளகாபுரியென்றொரு நகருண்டு; அந்நகரத்தில் நாற்குலத்து மேற்குலமாகிய அந்தணர்குலத்தில் சுக்கிரன், நதிபன் என்னும் இருவர் தோன்றினர். ஒருநாள் அவருள் நதிபன் தன் முன்னோனாகிய சுக்கிரனைத் தன் தாயபாக மளிக்கவேண்டுமென்று வேண்டினான். அவன் கொடுக்க மனமியையாமையால் நதிபனைவைது கொடுமொழிகூறினன். அவருள் சுக்கிரன் நதிபனைநோக்கி அடா! கொடியாய் என்னை முன்னோன் என்று சிறிதுமெண்ணாமல் வைதமையால் ஆறுயோசனை யகலமும், பன்னிரண்டுயோசனை நீளமுமான காட்டியானையாதி யெனச் சாபமிட்டான், நதிபனே என்னைப்பெறக்கடவதாகிய தாயபாகம்வழங்காமல் காட்டியானை யாதியென நியாயமின்றிச் சபித்தமையால் மூன்றுயோசனை யுயரமும, ஆறுயோசனை யகலமுமான ஆமையாதி யெனச் சாபமிட்டான். அவ்வாறே யொருவர்க்கொருவர் அச்சாபங்களை யேற்று இன்றுவரையும வடமேற்கடல் மூலையில் என்றும் இடைவிடாமல் நெடும்போர்செய்து வருகின்றனர். அவரால் பல்லுயிர்க்கும் பெருந்துயர் நேர்கின்றது. அவ்விருவரையும் நீ சென்று அருந்துக என்று கட்டளையிடவே, அதனைத் தலைமேற்கொண்டு வடமேற்கடன்மூலையை நோக்குங்கால் அவ்வாறே யானையும் ஆமையும் போர்செய்வது தோன்றக்கண்டு அவற்றைத் தன்காலில் ஒடுக்கிக்கொண்டு ஓரிடத்தில்வைத்து அருந்தலாமென்றெண்ணி நான்குதிசையுநோக்கினான்.

அங்ஙனநோக்க நூறுயோசனை யகலமாய் பல கப்பும் கிளைகளுடன் ஆலமரந்தோன்ற அம்மரத்தைக்கண்டு அதன் கிளையில்வந்திறங்கினான். இறங்கவே அக்கிளை பாரம் பொறுக்கமுடியாமல் சடசடவென்னு மொலியோடு முறிந்தது. அதில் அங்குட்டவளவு வடிவமுடையராய் வாலகில்லியரென்னு முனிவர்கள் இலைக்கொருவராகத் தங்கித் தவஞ்செய்தலை யுணர்ந்து இதென்ன மோசம் நேர்ந்ததே! காக்கையேறப் பனம்பழம் வீழ்ந்தது என்பதுபோலத் துன்பத்துக்குள்ளானோமே, இனி இக்கிளையுடன் நமது தாதையை யடைந்தாலல்லது நம் துயரகலாதென்று கடைப்பிடித்து அவ்விருவரோடும் அக்கிளையையும் விழாமல் காலில் ஒடுக்கிக்கொண்டு காசிபமுனிவனை வந்துவணங்கினான். அம்முனிவனோ அப்பா மகனே நீவந்தகாரணமென்னவென்றான். கலுழனோ ஐயா! நான் தாங்கூறியபடியே அவ் யானை யாமைகளைகாலினெற்றியருந்த வெண்ணி ஓராலமரத்தின் கிளையிலிறங்கினேன், அக்கிளையில் இலைக்கொருவராகத் தங்கி அங்குட்டவளவு வடிவமுள்ள இருடிகள் தவஞ்செய்கின்றனர். நானோ அறியாமல் இறங்கவே, அக்கிளைமுறிந்து நிலத்தில்விழுவதையறிந்து அதை விழவொட்டாமல் அம்முனிவருடன் கொணர்ந்தேன். அவர்களைப் பூமியில் விடுத்தால் என்னசாபங் கொடுப்பரோவென்றேங்கி உம்மைத் தரிசித்

தேன். இதுதான் என் விண்ணப்பமென்று வணங்கவே முனிவர்பெருமான் அம்முனிவரைநோக்கி, தபோநிதிகளே! நீங்களிருந்து தவஞ்செய்த மரக்கிளை யை முறித்தவன் உங்கள் பெருங்கருணையால் புத்திரகாமேஷ்டி யென்னும் வேள்வியிற்றேன்றிய கலுழனே யாகும். அவன் நீங்கள் தவஞ்செய்யும் மரமென்று தெரியாமல் வெற்றுமரமென்றெண்ணி இக்காரியஞ் செய்துவிட்டான். நீங்கள் செற்றத்தால் சாபமிடாமல் காக்கவேண்டுகின்றேன் என அத் தபோதனர்கள் காசிபமுனிவனை நோக்கி ஐயா, முனிவர்பெருமானே! உன்மகன் எங்களை மெல்ல நிலத்தில்விடுவானாயின் எங்கள் கருத்துக் கியைந்தவிடம் செல்வோமென வாலகில்லியர் கூறினார்கள்.

காசிபனே தன் மகனைக்கூவி மெல்ல அவர்களை நிலத்தில் விடுவாயென்று கட்டளையிட, அவ்வாறே கலுழனும் செய்துமுடித்தான். உடனே வாலகில்லியர் காசிபமுனிவனையும், கலுழனையும் வாழ்த்திப்போயினர். பின்னர்க் கலுழனும் பிதாவைவணங்கி இக்கிளையை யெங்கே யெறிவேன், இவற்றை எங்கே புசிப்பேன் கட்டளையிடவேண்டுமென் றிரந்துகேட்ப, முனிவர்பிரான் கூறுகின்றான். அப்பா, கலுழா! நீ இமயமலைக் கருகிலுள்ள நரமேதவரையிற்சென்று இக்கிளையை யெறிந்துவிட்டு, இமயமலையில் இருந்துகொண்டு இவ்விரண்டினையும் அருந்திப் பசிநீங்கிப்போய் அமுதங்கொணர்ந்து குற்றேவலினின்றுநீங்கிவாழ்தியென்றுசொல்லக்கலுழனும் காசிபனைவணங்கி விடைபெற்றுத் 'தந்தைசொன்மிக்க மந்திரமில்லை' என்றபடி அவ்விரண்டையும் அருந்திப் பின்னர் அவர்கூறியவண்ணம் அம்மரக்கிளையை நரமேதவரையில் எறிந்துவிட்டு அமுதநாடிக்கொணர ஆராய்வானாயினன்.

## அமுதங் கொணர்ந்த சருக்கம்.

---

கலுழன் அமுதங் கொணரக்கருதி 'அன்னையும்பிதாவும் முன்னறிதெய்வம்' என்றபடி அன்னை தந்தைய ரிருவரையும் மனத்தில் தியானித்து உயர வெழும்பி அமுதமிருக்கு நாட்டினைநாடி விரைந்து தன் சிறகின் காற்றினால் மேகங்களெல்லாமோடி இவ்வகையான யுகாந்தக் காற்றைப்போல் ஒருநாளுங் கண்டதில்லையே யென்றுவாடி நெட்டுயிர்ப்புநீடி அண்டருலகத்தே யெய்தின. மலைகளெல்லாம்வேரற்றன. காற்றுக்கடவுளும்இத்துணைவேகமான காற்றேது? இது ஊழிகாற்றோ என்று மருண்டான். இவ்வாறு கலுழனும் மிக்க வேகமாகக் கடுகிவர இந்திரன் நால்வேறியற்கைப் பதினொரு மூவரோடு ஒன்பதிற் றிரட்டி யுயர்நிலைபெற்ற அமரரும்,அருந்தவக்கொள்கைப் பன்னிரு நான்காயிரந் திருந்திய மனச்செம்மையினையுடையமுனிவரும் சூழ்ந்திருந்து கொலுவீற்றிருக்கஎன்றுந்தோன்றாதுர்நிமித்தங்கள்தோன்றின. அங்ஙனநிகழ்வதனைநோக்கி இதென்னபுதுமை! நாமென்றுங்காணாத துர்நிமித்தங்கள் தோன்றுகின்றனவே. இதனால் யாதுவிளையுமோ! என்றெண்ணி திடீரென்று தன்னாசனத்தை விட்டிறங்கித் தன்னாசிரியராகிய வியாழபகவானைக்கண்டிறைஞ்சி விண்ணப்பஞ் செய்தான்.

வியாழபகவான் திரிகாலவுணர்ச்சி யுடையராதலால் அதனைத் தமது ஞானதிருஷ்டியாலுணர்ந்து மூவுலகமும் புரக்கும் ஆகண்டலனே! இத்துர்நி மித்தத்தின் காரணம் வேறொன்றன்று. காசிபமுனிவருக்கு விநுதையிடத்திற் றோன்றிய கலுழன் தன் தாய் அடைந்த குற்றேவற்றொழில் நீங்க உன்னிட த்துள்ள அமுதத்தைக் கைக்கொண்டுசெலல வருகின்றனன். அதனால் இத் துர்நிமித்தங்கள் தோன்றின என்று கூறினன். இந்திரன் ஐயோ!ஒருபறவையும் என்னிடத்திலுள்ள அமுதங் கொண்டுபோமா! யானும் அத்துணைப்பேதையா? என்பால் குலிசப்படைமுதலிய தெய்வப்படைகளில்லையா! இதென்ன புது மையென்று பேசினன். அதற்கு வியாழபகவான் நீயென்ன மெய்ம்மறநது பேசுகின்றனை! முன்னே உன்பிதாவாகிய காசிபமுனிவர் புத்திரகாமேஷ்டி யென்னும் யாகஞ்செய்தனர். அங்குநாமனைவருமசென்றிருந்தோம். அப்போது வாலகில்லியரென்னு முனிவர்கள் தம்மாற்சுமக்க முடியாத ஓமத்திரவியங் கொடுவந்தனர். நீ அவர்கள் அங்குட்டவளவு வடிவமுடையராயிருப்பது கருதி யிகழ்ந்தனை! அவர்கள் சினந்து உனக்கித்தனைச்செருக்காவென்றும,இப்புத்திர காமேஷ்டியில் பிறப்போன் இந்திரனுக்கிந்திரனுகுக வென்றும், இந்திரமந்திரஞ் செபித்தனர். அதுகண்டு நீ நடுநடுங்கி அவர்களை வணங்கி வேண்டினை, அவர் கள் சினந்தவிர்ந்து பறவைகட் கிந்திரனுகுக என்று அம்மந்திரத்தையே வேறொருவகையாகச் சபித்தனர். அதிற்றோன்றியோன்தான் இக் கலுழன். அவர்கள் அவ்விந்திரமந்திரத்தையே செபித்திருப்பார்களாகில உனக்கு இந்திர பட்டமேது! அத்துணையாற்றலையுடைய கலுழனே உன்னிடத்துள்ள அமுதத் தைக் கொண்டுபோக வருகின்றான். அவன் எவ்வகையாலேனும அமுதங்கொ ண்டுசெல்வான்; அதற்குச் சிறிதும் சந்தேகமே யில்லை என்றான். அதற்கு இந்திரனும் அவ்வளவு காவலோடுள்ள அமுதத்தினை எவ்வாறு கொண்டுபோ வான், பார்ப்போமென்று தன்னுசிரியராகிய வியாழபகவானை வணங்கி விடை பெற்றுத் தன் சுதர்மமென்னுஞ் சபைக்கு மீண்டான். மீண்டுத் தன் பரிவா ரமாகிய அமரர்க ளனைவரையுங் கூவி வரவழைத்துக் கலுழன் அமுதங் கைக் கொண்டு செல்லவருகின்றனன், நீங்கள் முனைந்துநின்று காவல்கொண்டிருங் கோளென்று சொல்லியனுப்பித் தானும் போர்க்கோலங் கொண்டிருந்தான்.

இதுநிற்க, கலுழனும் கடையுக முடிவில்தோன்றும் ஊழி காற்றேபோலக் கடுகி விண்ணுலகமேங்கத் தன்சிறகிற்காற்று மிகுதியுமோங்க, கண்டவரெல் லாஞ் சித்திரப்பிரதிமைபோலத் திகைத்துவாடத் தான் அமுதமிருக்குமிடம் நாடிவந்தான். வரவே இந்திரன் கட்டளையிட்டருளியபடி அனலன் முதலிய அட்டவசுக்களும், மற்றைத் தேவர்கூட்டங்களும் ஒருங்குசேர்ந்து வில்,வேல், வாள் முதலிய ஆயுதபாணிகளாக எதிர்த்தனர். அவர்களையெல்லாம் தன் சிற கிலெழும் காற்றினல் சிதற அடித்துத் துறத்தினன். அதனல் தேவர்கூட்டங் கள் ஒருவர்போனவழி யொருவர் போகாமல் வெருண்டோடினர். அதனைநோக்கி அவருள் அனலன்முதலிய வசுக்கள் எண்மரும் தங்கள் கையிலிருந்த வில்லை வளைத்துக் கார்காலத்துமேகம்போலச் சரமழைபொழிந்தனர். கலுழனே அவ

ற்றைத் தன்சிறகிலெழுங் காற்றினல் வந்தவழி போனவழி தெரியாமல் அழிக்க, அவர்களும் பின்னிடாமல் தாம் அருந்தவஞ் செய்துபெற்ற தெய்வப்படைகளனைத்து மூறையே தொடுத்துவிடுத்தனர். அவற்றைக்கண்ட கலுழன் ஆலடைமேலறிதுயிலமர்ந்த ஆதியஞ்சோதியுருவை யன்பினின்நாடி யவன்புகழ் பாடி நின்று சாகசத்தினல் ஒருவகையாகத்தான்விடுபட்டு அவர்களைத் தன்காலாற்புடைத்துத்தள்ளினன். அவர்களும் மரணமூர்ச்சையடைந்தனர்.

இதுநிற்க, கலுழனே மீறி அமுதகலசத்தருகில்வந்தான். வரவே வடவைத்தீயைப்போல அக்கினிகாவலாக இருக்கக்கண்டு தானுயர எழும்பி ஆகாயகங்கையைச் சிறகினிலேந்தி யவ்வக்கினியை யவித்தான். உடனே அது அவியக்கண்டு பின்னருஞ்செல்கையில் ஒருசக்கரஞ் சுழன்றுவரக்கண்டான். விரைவில் தான் உடலைச்சுருக்கியச்சக்கரத்தையுந் தவிர்ந்து அமுதகலசத்தை யெடுத்தான். அக்கலசத்தைப்பின்னிக்கொண்டு நின்ற நாகங்களிரண்டுஞ் சீறியெழுந்தன. அந்நாகங்களிரண்டனையும் தன்காலினது உகிரால் ஓரறையறைந்து உடலைப்பிளந்து அக்கலசத்தையு மிக்க மகிழ்ச்சியுட னெடுத்துத் திரும்பினன். இதனைத் தன் ஒற்றராலுணர்ந்த ஆகண்டலன் விரைவினடர்ந்து வயிரப்படைகைக்கொண்டு அவன்மேல்விட்டெறிந்தான். அது கலுழன் சிறகிற்பட்டு ஓரிறகைப்பறித்துச்சென்றது. அதுகாலை இந்திரனைநோக்கி அமரர்கட்கிறையே! நீயார்? நானர்! வேறன்றே, நாமிருவரும் காசிபமுனிவன் மக்களேயன்றோ! நீயோ காசிபமுனிவனுக்கு அதிதிவயிற்றிற்றோன்றினை! யானே விநுதைவயிற்றிற்றோன்றினேன். என்தாய் நின்தாயேயன்றோ, என்தாய் ஒருவருக்குக் குற்றேவல்செய்து ஒழுகுவது நினக்குமுறையாமோ! நீயோ என்முன்னேன், நீயேஎறிந்துபோர்செய்தமையால்நின்படைபழுதாகாவண்ணம் அதற்கோரிறகு கொடுத்தேன். இனி நீயென்னை வெற்றியெய்தி நிற்பையெனக் கருதவேண்டாம் என்று கூறி அமுதகலசத்தை யெடுத்துக்கொண்டு ஆகாயமார்க்கமாகச் சென்றான். இந்திரனே இனி நம்மால் இவனை வெல்லவே முடியாது, நமக்காதரவான இவ்வமுதை நமக்களித்த அருட்பெருங்கடலாகிய மாயனையல்லது உபாயம் வேறொன்றறியேனெனத் துணிந்து பகவானைநினைந்து மாய, மலர்மகணைய, அன்பர் சகாய, அகிலமுண்ட செவ்வாய என்று அவனது ஆயிரநாமஞ் சொல்லித்துதித்தான். எள்ளி னெய்போ லெங்குநிறைந்த கமலக்கண்ணன், காயாம்பூவண்ணன் கடுகியணுகிக் கலுழன்முன் பாஞ்சசன்னியம், சுதரிசனம், சார்ங்கம், கௌமோதகி, நாந்தகம் என்னு மைம்படையொடு தோன்றினன். தோன்றவே கலுழன் தன்முன் ஐம்படையோடு தோன்றிய ஆதியஞ்சோதியுருவைக்கண்டு உயர்வற வுயர்நல முடையானே! மயர்வற மதிநல மருளுமாண்பே! அயர்வறு மமரர்கட்கிறையே! துயர்வறு சுடரடித்தோன்றால்! என்று இன்னனவாகச் சூழ்விசும்பிறையைத்தோத்திரம்புகன்று நின்றுஅடியளந்தான் சிந்துபூமகிழுஞ்சேவடியை வணங்கினன். புண்டரீகக் கட்டுயன்போன்ற மேனிப்பிரான் கலுழா! நீயருளுடைமை; அன்புடைமை,வலியுடைமை,முதலிய நற்குணங்க ளனைத்துங் கோட்டிகொண்டுடையாய்! ஆகலின் நின்னைக்காண

பான் வந்தேன்; நீ வேண்டிய வரங்களொன்றுங் குறையாமற் பெறுதியென் றியம்ப, கலுழன் ஆராவமுதாழ்வானைக் கண்டு களிகூர்ந்து புகழ்ந்து அண்டர் பெருமானே! அடியார்பருகுஞ் செந்தேனே! புண்டரீகை மகிழுங்கோனே! யான் வேண்டுவது தீயொழுக்க நெறியொழுகாச் சிந்தையும், திருவுறை மார்ப னுகிய நின்பாற் றிண்ணிய வன்பும், அயர்வறுமமரர்கள்போல என்று நித்திய சூரியாக வாழுந் திறனு மளிக்கவேண்டுகின்றே னென்று விண்ணப்பஞ் செய் தான்.

கவுத்துவமணிந்த கருணைநெடுங்கடல் அவ்வாறே வரங்கொடுத்தருளிப் பின்னரும் கலுழனைநோக்கி எமக்கு நீ வாகனமாகவும், துவசமாகவும் இருக்க வென்று கூறலும், அதற்கிறப்ப மகிழ்வெய்தி அவ்வாறே ஆனேனென்று கூற க்கேட்டு அருமறைதுணிந்த அரும்பரன் முக்காலமில்லாத திருமாமணிமண்ட பத்திற் கெழுந்தருளினுன். அச்சமயநோக்கி ஐராவதமென்னும் யானையின் மேலேறிப் பவனிவரும் இந்திரன் கலுழா! நீயும் நானும் வேறே! நீயும், நானும் ஒருவருக்கொருவர் சகோதரரேயாமன்றே! ஆதலின் எமக் காதரவாயுள்ள அமுதங்கொண்டுபோதல் நலமாமோ, நீ யளித்தால் உன்னுற் சுகப்படுவதே யாகுமென்று பலவாறு வருந்திக்கேட்பக் கலுழன் கூறுகின்றுன்; என் தாய் ஒருவருக்குக் குற்றேவல்செய்வது உன் மனத்துக்கு இசைந்ததாமா, அதை நீக்கக்கொண்டுபோகின்றேன்; நீயேன் மறிக்கின்றனை யென, இந்திரனும் கவலை கொண்டு மீண்டுங்கூறுகின்றுன்; நீ கொண்டுசெல்வதனுல் ஒருகுற்றமேயில்லை; ஆயினும் எனக்கு ஓருதவிசெய்ய வேண்டுகின்றேன், அதாவது இதைக்கொ ண்டுசென்று கத்துருவிடத்திற்சேர்த்து எங்கள் குற்றேவற்றெழில் நீங்கிற் றுவெனக்கேட்டு உன் தாயுநீயும் வெளிப்படுங்கோள்; அப்போது ஆதிசேஷன் முதலான நாகராசர் இவ்வமுதகலசத்தைவந்து மொய்த்துக்கொள்வர், அப் போது இதுவோ தேவாமுதம்! இதனை யசுசியாக அருந்தல் பொருந்துமா? நீங்கள் நீராடி யருந்துங்கோள் என்றுகூறுவதாகிய வாக்குச்சகாயஞ்செய்யவே ண்டும். அக்காலையில் என்மாயையால் அதனைக் கவர்ந்துகொள்கின்றேன் என, அதற்கிணங்கிய பின்னர் கலுழன் இந்திரனைநோக்கி எனக்கொரு வரந்தரவே ண்டும், அதாவது என்னைச் சகோதரனென்று மதியாமல் என்பால் தகாக குற்றேவல்களையிட்ட ஆதிசேடன் முதலானேரை யான் உணவாக அருந்துவ தே யென்றுன். இந்திரனும் அவ்வாறேயாகுகவென வரமளித்துத் தானும் மாயையால் அவன்பின் தொடர்ந்துசென்றுன். கலுழனும் கத்துருவிடத்து அவ்வமுதகலசத்தைச் சேர்த்து, இதோ தாயே கொணர்ந்துகொடுத்தேன், நாங்கள் இனிக் குற்றேவல் செய்வோரல்லோம் என்று நீக்கிக்கொண்டு விடை பெற்றுத் தாயுடன் சென்றுன். கத்துருவும் கலுழனைநோக்கி நீயும் நின்றுயும் என்குற்றேவலினின்றும் நீங்கலாயினிர், இனி உமக்கு இஷ்டமான இடத்திற் போங்கோளெனக் கலுழனும் தானும் தன்தாயும் விடைபெற்றுப்போயினுன். அப்போது ஆதிசேடன் முதலானேர் அவ்வமுதகலசத்தை யாவரும் கருப்பஞ் சாற்றை ஈக்கள் மொய்த்துக்கொள்வதுபோல் மொய்த்துக்கொண்டனர். அது கண்டு கலுழன், காத்தவேயரே ஈதென்ன புதுமை! இஃது அமுதகலசமன்றே!

இவ்வண்ணமும் அருந்தலாமா! நீங்கள் அசுசியாயிருக்கின்றீர்களே, நீராடியன்றோ புசிக்கவேண்டுமென, அவ்வாறேசெய்கின்றோமென்று அவர்கள்சொல்லக் கேட்டுத் தான் தன்தாயிடம் விடைபெற்று அயர்வறு மமரர்கட் கதிபதியாகிய ஆதிபகவன் இனிது எழுந்தருளியிருக்கும் முக்காலமில்லாப் பரமபதமே சென்று நித்திய சூரிகளி லொருவனாயினன்.

இதுநிற்க, ஆதிசேடன்முதலிய காத்தவேயரும் கலுழன் கூறியவாறு சுசியாய் அருந்துவதே நலமாமென்று கருதி யாவரும் நீராடச்சென்றனர். அச்சமயத்தில் இந்திரன் மாயவேடங் கொண்டுவந்து அவர்க ளில்லாமை யறிந்து அவ்வமுதத்தைக் கவர்ந்து சென்றான். சென்று முன்னிலும் அதற்கு அதிக காவல்க ளமைத்துத் தன் சுதர்மமென்னும் சபையையணுகினன். காத்தவேயரோ நீராடிவந்து அவ்வமுதம் வைத்திருந்த இடத்திற் காணாது அலைந்து தாயை வணங்கி, தாயே அமுதகலசமெங்கேயென்று கேட்க, அவளும் கையை நெரித்துக்கொண்டு மக்களே! நீங்கள் பாக்கியவீனர், 'கைக்கெட்டியது வாய்க் கெட்டாமற்'போயிற் றென்னும் பழமொழிப்படி யாயிற்று. மேலும் இனி எவ்வாறுபெறுவீர். 'கலைபுமப்பைக்கண்டு கட்டியிருந்தவிதையைவட்டிக்குவிட்டா' ளென்பதுபோல் ஆயிற்றே யென்று வருந்தி தன் மனைக்குச்சென்றாள். அவர்களோ நாம் பேராற்றலையுடைய கலுழனாற் பெறுதற்கருமையான அமுதம்பெற்றும் புசிக்கும்பாக்கியம் பெறாமற்போயினோமே என்று மனநொந்து அவ்வமுதகலசம் வைத்திருந்த தருப்பைப்புல் மணக்கக்கண்டு அதில் அவ்வமுதம் சிந்தியதாகக் கருதி யாவருமொருங்குகூடி அத்தருப்பையை நாவால் நக்கினர். உடனே அவர்கட்கு நா இருபிளவாயின. அதனால் அவர்கள் வறிதே யேங்கியிருந்தனர். இதுநிற்க.

எல்லாக்கலைகளையும் ஐயந்திரிபறவுணர்ந்த ஆதிசேடனோ தன்னந்தனியேயிருந்தும் கலுழன் கரியவன், அருமறைகட் கரியவன், யார்க்கும் பெரியவன் எப்பொருட்கு முரியவனாகிய பரம்பொருட்கு வாகனமாயும், துவசமாயும் கொண்ட வரத்தையும், அவனுரத்தையுங்கண்டு, இனிஅவனுக்கு நாமிரையாவது திண்ணம், நாமுய்வதே யில்லையென்றெண்ணிப் பின்னும் யோசிக்கின்றான். அந்தோ நமதுபின்தோன்றிய ஏனைய நாகராசரோ மிகக்கொடியார். அவரைநீங்கி நாம் வாழ்வதே நலமென்று ஒரு வனத்தையணுகிப் பஞ்சேந்திரிய நிக்கிரகஞ்செய்து உந்திவந்த ஒருவனை, உலகையுதவும் பரமனை, நாமடந்தைமகிழும் பெரியனை, நான்மறையோதுமுரியனை, மாதவர்பரசும் பிரமனை நாடித் தவஞ்செய்திருந்தான்; அவ்வாறு தவஞ்செயக்கண்டு பிரமன் விரைவில்வந்து காட்சிதந்து உனக்கென்னவரம்வேண்டுமோ அதைக் கொடுத்தேனென்ன, அப்பிரமனை வேதமந்திரங்களால் துதித்து இனிச் சந்திரகுலோத்துங்கனாகிய ஜெனமேஜெயமகாராஜன் செய்யும் சர்ப்பயாகத்தில்மடிய எனக்கு நேரிட்டிருக்கிற சாபமொழியவும், கலுழனால் துன்பமடையாதிருக்கவொரு வழியும், என்சகோதரருடன் கூடியிருக்கும் பழியு நீங்கவும் வேண்டுமென்று வணங்கினின்றான்.

அதற்கு அன்னவாகனனாகிய பிரமன் கூறுகின்றான்; அப்பா, வருந்தாதை! உன் சகோதரிவயிற்றில் ஒரு சற்புத்திரன் உதிப்பான், அவனால் சர்ப்பயாகத்தின் துயரநீங்கும். நீயோ பாதலத்திற்சென்று அங்குள்ள நாகங்கட்கெல்லாம் தலைவனாகி இவ்வுலகைப் பொறுத்திரு, உனக்குக் கலுழனால் நேரிடும் துன்பும், உன் சகோதரர்கள் நண்புமகலும் என்று கட்டளையிட்டுத் தான் சத்தியலோகமேபோய்ச் சேர்ந்தான். ஆதிசேஷனை மறைமுதல்யோகி யிட்ட கட்டளைப்படி பாதலஞ்சென்று இவ்வுலகத்தைப்பொறுத்து அங்குள்ள நாகங்கட்கெல்லாந் தலைவனாயினன். இதுநிற்க, அத் தக்ஷகன்முதலானோர் தம் முன்னோன்வரலாற்றைக் கேள்விப்பட்டு மிக்கவருத்தமுற்றுத் தாயிட்டசாபந்தைநினைத்து என்னசெய்வோமென்று வாடியிருந்தனர்.

## சலர்க்காரமுனிவன்கதை.

---

இவ்வாறு இவர்கள் தாயிட்டசாபத்தை யெண்ணிப் பரதவித்திருக்கையில் நாற்குலத்து மேற்குலமாகிய அந்தணர் மரபில் சலர்க்காரனென்னும் ஒரு முனிவனிருந்தான். அவன் இளமை நிலையாமை, செல்வ நிலையாமை, யாக்கைநிலையாமை யுணர்ந்து இளமையிலே; 'நரைவருமென்றெண்ணி நல்லறிவாளர் - குழவியிடத்தே துறந்தார்.' என்றபடி இல்லந்துறந்து பிரமசரிய ஒழுக்கநெறி யிகவாமல் தனக்கிசைந்த வனங்களில் வசித்துவந்தான். அவன் ஒருநாள் வானமளாவி யுயர்ந்த முதுமரமொன்றுகண்டு அம் மரத்தினருகே சென்று பார்க்கையில் அறக்கடவுளாகிய யமன் கட்டளையால் இருபத்தொரு மகாபுருடர் தலைகீழாக வௌவால்போல் நான்றுகொண்டு துயருறுவதைக்கண்டு இவ்வாறு தவஞ்செய்வதை நாம் எங்குங்கண்டதில்லையே, இதென்ன விபரீதமென்று அவர்களை வணங்கிநின்று இவ்வாறு தவஞ் செய்யக் காரணமென்னவென்று வினவினன். அதற்கவர்கள் அப்பா! இங்கே நாங்கள் தலைகீழாகத் தொங்குவதொழியத் தவஞ்செய்வோரன்று; எங்கள் மரபில் சலர்க்காரன் என்று ஒருவன் பிறந்தான், அவன்இளமையிலேயே துறந்து பிரமசரியமே மேற்கொண்டு நின்றான். அதனால் எங்கள் மரபு விளங்காமை கருதி அறக்கடவுள் எங்களை இவ்வாறு செய்தானெனச் சலர்க்காரன்கேட்டுத் திடுக்கிட்டு இதனைக் கூறுவானாயினன்.

ஐயன்மீர்! சலர்க்காரனென்னும் பெயரையுடையான் யானே; சினங்கொள்ளாதீர்; 'துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொல் - மற்றையவர்கள் தவம்' என்பது கருதி இல்விற்சிறந்தது அன்றெனத் துறவற மேற்கொண்டேன். ஆயின் எனக்கொருவரம்வேண்டுகின்றேன். அதாவது என்பெயருள்ளமாதை யான் மணம்புரியக் கட்டளையிடவேண்டுமென் றிரந்துகேட்ப, அவ்வாறே அவர்கள் வரந்தரவேற்றுத் தன் பெயருள்ள மாதை நாடி யெங்குந்தேடி முகம்வாடி தெய்வகதியாய்க்கத்துருவிருக்குமிட மோடிவந்தான். கத்துருவும் முனிவன்வரவைத்தமதுமக்களாகியதக்ஷகன் முதலானோருடன் ஏற்று எதிர்கொண்டுஆசனமளித்துஅதிலிருக்கச்செய்துவணங்கினள். சலர்க்காரனையெ

ன்னும்கன்னிகையும் வந்து வணங்கினள். சலர்க்காரனென்னு முனிவர்பெருமா னும் அவர்கட்குப் பல ஆசிகள்வழங்கி நாககுமாரரே! இதோநிற்கின்ற பெண் மணியார்! அவள் பெயரென்ன! இவளை யார்க்கேனும் விவாகஞ்செய்துகொடு த்தீராவென்று கேட்ப, அதற்குத் தக்ஷகன் ஐயா! இப்பெண்மணி எங்களுடன் றேன்றினாள். இவள்பெயரோ சலர்க்காரை யென்பர். இவள் இன்னும் மணஞ் செயப்பெற்றில ளென்றான். அதுகேட்டு மனமகிழ்ந்து இவளை எனக்கு மணஞ் செய்விக்கவேண்டுமென்னவே, தக்ஷகன் முதலானோர் தேனில்விழுந்த ஈயைப் போலத் திடுக்கிட்டு இது என்ன புதுமை! நமது தங்கையை இம்முனிவர் மண ஞ்செய்விக்கக் கேட்கின்றனர்; நாம் மறுக்கில் முன்னே தாயிட்ட சாபத்தால் மனந்தளர்வதே பெரிதாயிருக்கின்றதே! இப்போது இவரால் யாது நேரிடு மோ என்று மனந்திகைத்து ஒருவர்முகத்தை யொருவர் பார்த்துக்கொண்டு நின்றனர். அப்போது நாகராசனொருவன் சொல்லுகின்றான். ஐயன்மீர்! நீங்க ளேன் மயங்குகின்றனிர்! சிலநாண்முன் நான் நமது தாயிட்ட சாபத்தி னுரத் தையும், கலுழன் வரத்தையும் நினைத்து நித்திரைசெய்கின்றபோது ஒருகனவு கண்டேன். அக்கனவில் நான் கண்டதாவது ஜெனமேஜெயமகாராஜன் சர்ப்ப யாகஞ்செய்யவும், அவ்யாகத்தில் நம்மவ ரிறக்கத் தேவர்கள் சென்றுபிரமதேவ னிடத்து முறையிடவும், பிரமதேவன் அத்தேவர்களை நோக்கி ஏன் வருந்து கின்றீர்கள்! அத்தக்ஷகன் முதலானோருடன் ஒரு பெண்கொடி பிறந்திருக்கின் றனள். அவளைஒருமுனிவன் மணமாலைசூட்டுவான். அவன்அருளால்ஒருபுத்தி ரன் தோன்றுவான். அவனால் நாகங்களுக்கு நேரிடுந் துன்பமும் நீங்கும் எனக் கனவுகண்டேன்; அக்கனவு நனவாகப்பலித்தது; நீங்களேன் மயங்குகின்றீர் கள், இம்முனிவன்கருத்தின்வண்ணம் நமதுதங்கையைப்பாணிக்கிரகணஞ்செய் துகொடுப்பதே நலம், இனி நமக்கு அவலமில்லை யென்றனன். அவ்வாறே அவ ர்களெல்லாரும் அதற்கிசைந்து அம்முனிவர்பெருமானுக்குத் தம் தங்கையைப் பாணிக்கிரகணஞ் செய்துகொடுத்தனர். அம்முனிவனே அம்மாதைப் பாணிக் கிரகணஞ்செய்துகொண்டு ஒரு வனத்தினை யணுகிப் பன்னகசாலையொன் றியற்றி அதில் வசித்துத் தன்மனைவி குற்றேவல்செய்ய விருந்தான். இவ்வாறு சிலகாலஞ்சென்றபின்னர் ஒருநாள் தன் மனைக்கிழத்தியாகிய சலர்க்காரையை அழைத்துப் பெண்கொடியே! உன்னை மணம்புரிந்ததுமுதல் இதுகாறும் நீ செ ய்துவந்த குற்றேவலுக்கு மிகவு மகிழ்ந்தேன். இனி இருவரும் மதனுமிரதியும் என மருவியிருப்போம். ஆயின் ஒன்றுசொல்கின்றேன்; கேள்! எனக்குஎன்று நீ ஓர்குற்றஞ்செய்வாயோ அன்றே உனக்கு என் தொடர்பு நீங்கும், இதுதான் உறுதிமொழியென்று அவளொடு இனிமையாக வாழ்ந்திருந்தான். இங்ஙன நிகழ்கையில் ஒருநாள் அந்திவேளையில் சலர்க்காரமுனிவன் நித்திரைசெய் தான். அதைநோக்கிச் சலர்க்காரை இதுவோ அஸ்தமனகாலமா யிருக்கின்றது. முக்குற்றங்கடிந்த முனிவரர்கள் சந்தியானுஷ்டானஞ் செய்கின்றனர். நமது கணவனோ துயில்கின்றனன். இச்சமயத்தில் நமது கொழுநனைத் துயிலினின்று மெழுப்பாவிடினும் குற்றம், எழுப்பினும் சினந்துகொள்வன் இதற்கென்செய்வ

தென்று நினைத்து 'தெய்வச்செயலின்படி நடக்கும்' என்பது துணிந்து கணவ னுடைய பாதங்களை வருடுவதுபோல் பற்றினள். உடனே சலர்க்காரமுனிவன் நித்திரை தெளிந்தெழுந்து சினங்கொண்டு நீ என் நித்திராபங்கம் செய்தமை யால் இன்றுமுதல் எனக்கும், உனக்கும் இனித் தொடர்பொன்று மில்லை என்று சொல்லிவிட்டுத் தன் கருத்துக்கிசைந்தவிடஞ்செலலத் துணிந்தான்.

அதுபோழ்து சலர்க்காரையோ அம்முனிவன் கழலைவணங்கி சந்தியா நுஷ்டானகாலமாதலின் நீர் துயில்வது சமையமன்று எனத் துணிந்து எழுப்பி னேன்; வேண்டாப்பெண்டிர் கைப்பட்டாற் குற்றம், கால்பட்டாற் குற்றமெ ன்பதுபோலக் குற்றமில்லாததனையும் குற்றமாகக்கருதிஎன்னைப்பிரியத்துணிந் தீர். யான் உய்யும்வகை யாதென்று ஆராவன்புடன் வணங்கிக் கேட்டனள். நீயேன் வருந்துகின்றனை; பெண்கொடியே! உன் வயிற்றில ஒரு சற்புத்திரன் பிறப்பன். அவனால் உனக்கும் உன் சுற்றத்தாருக்கும் நலமுண்டாம். இனிச் சற்றுத் தாமதமின்றி நின் பிறந்தகஞ் செலலென்று முனிவர் தவஞ்செய்யப் போய்விட்டனர். பின்னர் சலர்க்காரையோ தன் பிறந்தகமே சென்று தன் தாய்க்கும், தன் முன்னோருக்கும இதனைச்சொல்லவே அவர்கள் மிக வருத்த மடைந்து இனி நாமென்னசெய்வதென்று கருதிச் சலர்க்காரையை ஆதரித்து வந்தனர். சிலநாள் சென்றபின்னர் சலாக்காரை நாகரத்தினம்போல ஒருமைந் தனையீன்றாள். அவன் சலர்க்காரமுனிவன்வழித் தோன்றலாதலால் 'மகனறிவு தந்தையறிவு' என்றபடி ஞானமே ஒரு திருமேனியுடையானும், பல நூற்க டல் கடந்து கேள்வித்துறை வல்லானுமா யிருந்தான்.

இதுநிற்க, ஜெனமேஜெயமகாராஜனே! நீரோன் ஐயம்படுகின்றீர், விரை விற் சர்ப்பயாகத்தை நிறைவேற்றுமென, அரசனோ தேவரீசொன்ன அனைத் துஞ்சரியே! எனக்கு அத்தக்ஷகன் ஒரு குற்றமுஞ்செய்தானிலலையே! அவ் வாறிருக்க நானெவ்வாறு செய்யத்துணிவதென, உதங்கமுனிவன் அரசே! எனக்கு அத்தக்ஷகன்செய்த குற்றமே பெரிதன்று; உமக்குச்செய்த குற்றந் தான் கடலினும்பெரிதென்றனா; அதற்கு அரசாபெருமான் அதன்வரலாற் றை நன்குவிளக்கவேண்டுமென் றிரநதுகேட்ப முனிவாபெருமான் கூறுகின் றான்.

ஜெனமேஜெயமகாராஜனே! குருகுலத்தரசனாகிய நின்தாதை பரீட்சித்து மகாராசன் அத்தினபுரத்துக் கதிபதியாகி ஐமபத்தாறுதேசங்களையும்தன்னொ ருகுடைக்கீழ் ஆண்டுவருங்கால் ஒருநாள்வேட்டையாடக் கருதித் தன்னமை ச்சர் முதலானோருடன் தன் காலவகைப்படைசூழ வேட்டையாடச் சென் றான். சென்று சிங்கம், யானை, புலி, கரடி, செந்நாய்முதலிய மிருகங்களைவே ட்டையாடி வருகையில் ஒருவேங்கைவேடர்கள் இட்டவலையைக் கடந்துசெ ன்றது. அதுகண்டுவேடர்கள் ஓடோடியும் வந்துவணங்கி அரசனுக்குக்கூற அரசன்கேட்டுச் சினந்து வலையைக்கடந்துஞ் சென்றதா? எதோ அந்தவேங் கையென்று ஆகுலித்து வாயுகதியென்றுகூறத்தக்க வேகமுடைய பரியின்மே லேறித் தேடப்புறப்பட்டான். அந்தவேங்கை மிகவேகமாய்க் காடு,மலை,முத

வியவை கடந்து சென்றது. அரசனும் விடாமற் பின்சென்று வேங்கையைத் துறத்துகையில் வேங்கை ஒரு மரச்செறிவினையணுகி மறைந்துவிட்டது. அது மறையவே அரசனும் நாற்றிசையும் சுற்றிச்சுற்றிப் பார்த்தும் யாண்டுங் காணுது மிக்கஉக்கிரமாக அம்மலையினின்றும்இழிந்து வருங்கால் இடையே பயிரவனென்னுமமுனிவர்பிரான் அவ்வழியில் ஓரிடத்தில் விழித்தகண்ணோடு தவஞ் செய்திருந்தனன். அரசர்பெருமானே அம்முனிவனைக்கண்டுவணங்கி நின்று முனிவர்பிரானே! இவ்வழி ஓர் வேங்கை யெய்தக் கண்டனையோவெனக் கழற அவனோ தவஞ்செய்து நின்றமையான் மௌனமா யிருந்தனன்.

பின்னர் அரசர்பெருமானே நாம் பன்முறைவணங்கிக்கேட்டும் சும்மாவிருக்கின்றனனெனச் சினந்து ஆங்கிறந்துகிடக்கும் அரவு ஒன்றினை அவன்கழுத்தில் மாலைபோன்று சுற்றிமீட்டுமே வேங்கையைத்தேடித் தன்சேனையோடும் தன் அத்தினாபுரமடைந்து அரசாண்டுவந்தான்.நின்தாதை அப்பயிரவமுனிவன் கழுத்தில் அரவினைமாலையாகச் சுற்றிச்செல்கையில் அம்முனிவன் அருகில்தவஞ்செய்துகொண்டிருந்த ஓரருந்தவர் அதைக்கண்டிருந்தனர். அவரோ அச்செய்தியை அம்முனிவன் மைந்தனுக்கு வெளியிட்டனர். அதை அம்முனிவன் மகனாகிய சிருங்கிமுனிவன்கேட்டுக் கோபித்துநின்று,என்தாதைகழுத்தில் இறந்தபாம்பினை மாலையாகச்சுற்றிச்சென்ற அரசன் இன்றைக்கேழாநாள் தக்ஷகனென்னும்நாகராஜனால்மரணமடைகவென்றுகடுஞ்சாபமிட்டுத் தன்தந்தைதவஞ்செய்யுமிடம்போந்து கழுத்தினைச்சுற்றிக் கிடந்த பாம்பினை யெறிந்துவிட்டு வணங்கிநின்றுன். அப்போது அம்முனிவர்பிரான் தவத்தினின்றும் விழித்து நோக்கி, மகனே இங்கடைந்ததென்ன காரணம்? எனக்கொன்று மொளியாமற் கூறெனச் சிருங்கிமுனிவனும் நடந்தசெய்தி முழுவதும் ஒன்று மொழியாமற்கூறினன். முனிவர்பிரானும் முக்காலமும் உணர்ந்தாராதலின் வந்தவன் இன்னவனென்றும், அவனுக்குத் தன்மைந்தனிட்ட கொடுஞ்சாபமும் உணர்ந்து இருசெவியும் பொத்திக்கொண்டு கூறுகின்றுன்.

மகனே! 'உற்றநோய்நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை யற்றேதவத்திற்குரு' எனத் தேவர்கூறியவண்ணம் இவ்விரண்டுமன்றோ தவத்திற்குருவமாகும். இதனையுணர்ந்திருந்தும் மன்பதையனைத்தும் தன்னுயிரெனக்கருது மகாராசனாகிய பரீட்சித்தை யாதுநினைந்து யாதுசெய்தனை! அவன் அரசுசெய்து வருவதனாலன்றோ தருமதேவதை நான்குபாதங்களாலும் நடக்கின்றது. அவ்வரசர்பெருமான் இறந்துவிடுவானேல் இனியெவன்அரசாளவருவனோ! இனிஉலகமும் எவ்வாறுமோ! 'நீரின்றமையாதுலகெனின் யார்யார்க்கும்வானின்றமையாதொழுக்கு'எனப்பொய்யாமொழியார்புகன்றவண்ணம்,உலகினுள்ளார்யாவரும் மழையினாலேதான் எந்நலனுமனுபவிக்க வேண்டும். 'மழையின்றி மாநிலத்தார்க்கில்லை மழையுந் - தவமிலாரில் வழியில்லை தவமும்,அரசாள்வாரில் வழியில்லை' எனப்பெரியோர்கூறியபடி நமக்கெல்லாம் நிர்ப்பயமுண்டாம்வண்ணம் ஒற்றைத்திகிரியுருட்டிவருகின்றுன்.அப்படிப்பட்ட அரசர்பெருமானுக்கு நீ சிறிதுமுன்பின்எண்ணுமற்கடுஞ்சாபமிட்டனை! இவ்வாறு கடுஞ்சாபமிடவும்போமா !இது

முறையன்றே,என்று மிகவுமாகுலித்து நின்றனர். அதுகேட்டுச் சிருங்கிமுனிவனும் இறைவனே! நானும் சிறிதேனும் இன்னது நேரிடுமென்பதைக் கருதாமலே இத்துணைக்கொடுஞ்சாப மிட்டுவிட்டேன், யான் சாபந்தர வலியுள்ளேன் அன்றி மறுசாபங்கொடுக்க வலியிலேன், இதற்கென்செயக்கடவேன் என்று தன் தாதையிடம் முறையிட்டான். பயிரவமுனிவன் தன்னருகிலிருந்தவரைக் கூவி முனிவர்களே! நீங்கள் பரீட்சித்துமகாராஜனிடஞ் சென்று நடந்தசெய்தியொன்று மொழியாமல் அறிவிக்கவேண்டும். ஏழுநாள்மாத்திரம் பாம்புவராதவிடமாகக்கண்டு வசிக்க அறிவியுமென்றனன். அவர்களும் அம்முனிவன் கட்டளையையேற்று முனிவனுரைத்தவண்ணம் போய் நின்தந்தையிடங்கூறிப் போயினர். அவர்கள்போகவே நின்தந்தையும் தன் அமைச்சர், புரோகிதர் முதலானோரை நோக்கி இதனைக் கூறியாராய்ந்து அவர்கள்சொன்ன சூழ்ச்சியினால் கடலில் ஒரு பெரியதூண் நட்டு, அதன்மேல் ஓரழகிய மண்டபமியற்றி அதில் உன்தந்தைக்கு அரவின் விஷத்தினையகற்றும் மருத்துவர், மந்திரவாதிகள், இவருடன் பலகாவலையு மமைத்து அதில் ஆறுநாள்வரையும் சிறிதுங் குறைவென்பதில்லாமல் இனிதுவீற்றிருந்தான்.

சிருங்கி முனிவனிட்ட சாபத்தை நிறைவேற்ற வெண்ணிப் பாதாளலோகத்தினைக்கடந்து இவ்வுலகத்தை யணைந்த தக்ஷகன் இங்கே உன் தந்தையிருக்கும் காவலை யாங்காங்கு கூறுவதுகேட்டுக் கப்புங்கிளையுமாகத் தழைத்த ஓராலினிழலில் வந்து நின்று இவ்வகைக் காவலுட னிருக்கின்ற அரசனையெவ்வாறு கொல்வது? இப்பெரிய வடிவொடு செல்வேனாயின் ஒரு வீரனே என்னைக் கொலையுணச்செய்வன். அவ்வாறன்றென்று அரசனைவிட்டுப் போவேனெனின் என்தலை யாயிரஞ்சுக்கலாமே! இதற்கென்செய்வேனென்று ஆராயும்போது ஓரந்தணன் மிகவேகமாய் ஓடிவருவது கண்டான். அவ்வந்தணன் சேர வருவதன் முன்னமே தானுமோ ரந்தண வேடங்கொண்டு அவ்வந்தணனைக் கிட்டி யாண்டிருந்து வருகின்றீர், யாண்டுச்செல்லுகின்றீர், உள்ளவாறு கூறுமென வந்த அந்தணன் கூறுகின்றான். ஐயா நான் பரீட்சித்து மகாராசனை அரவம் தீண்டச் சாபநேரிட்டிருப்பதனால், அதற்கு மந்திரவாதிகளையும், மருத்துவரையும் வருவித் திருக்கின்றமைகருதி யான்சென்று என்மந்திரவாற்றலைக் காட்டி என்னை வருத்துமிடியைப் போக்கவந்தேன். அந்நாளும் இன்றேயாதலால் விரைவிற் போகவேண்டுமெனத் தக்ஷகனாகிய அந்தணவேடங் கொண்டோன் அந்தஅரசனைக்கொல்ல வருகின்ற நாகமென்ன இலேசா! நாகராஜரில் தலைமையான நாகமாயிற்றே.அதுவும்முனிவனிட்டசாபத்தை நிறைவேற்ற வருவதன்றி வேறொன்றன்றே,அவ்வரவின்விடமோ சந்திரசேகரனாகிய பரமசிவனாலல்லது மற்றொருவராற் சாத்தியமாவதோ! அதை நீயடக்குவதாகச்சொல்லித் துணிந்தது 'வறுமையி னின்னாததில்லை' யென்பதை யொக்குமன்றேயன்றி மந்திரவாற்றலுடையா யென்பது தோன்றுகின்றதேயன்று; என்னவே, அதற்கு அந்தணன் கூறுகின்றான். உமக்கென்னமதியீனம், ஆதிசேஷன், அனந்தன், வாசுகி, கார்க்கோடகன், தக்ஷகன்முதலிய நாகராஜர் ஒருங்குகூடி யொருவனைத்

தீண்டினும் ஏயென்னுமாத்திரையில் அவ்விடத்தினை யிருந்தவிடந்தோன்றா மற் போக்கிக் குணப்படுத்துவேனென்று உறுதிமொழிகூறத் தக்ஷகன்கூறுகின்றான். ஐயா நானே தக்ஷகனென்பவன். இவ்வாலவிருக்ஷத்தினை என்விஷத்தீயால் நீறாக்கிவிடுகின்றேன். உன்மந்திரசத்தியால் பட்டமரத்தினை முன்போல் தளிர்த்துப் பூத்துக் காய்த்துக் கப்புகளோடு தழைத்திருக்கச்செய்யும் பார்ப்போமென்று தன் சுயவடிவத்தினையடைந்து அம்மரத்தினைத்தீண்டி விஷங்கான்றான். அவ்வாலமரம் கணப்போதில்வெந்து சாம்பராயிற்று. உடனே அந்தணன் ஸ்ரீபஞ்சாக்கரத்தொடு கலந்த சஞ்சீவி மந்திரத்தினை யொருகாலுச்சரித்தான். அங்ஙனம் பட்ட மரம் தளிர்த்துப் பூத்துக்காய்த்துக் கப்புவிட்டுத் தழைத்துப் பழையபடியே நின்றது. அதுகண்டு திப்பிரமைகொண்டு மோசம் வந்துவிட்டதே! இம்மகாபுருஷன் அரசன்பாற் செல்வானாகில் நாம் கடித்ததனாலே யாதுபயன்! இம்மகாத்துமாவை அங்குச் செல்லாதிருக்கும் வகைசெய்யவேண்டுமென்று துணிந்து, அந்தணர்பெருமானே! நீர் இத்துணைத்தூரம்வர மனந் துணிந்தமை செம்பொற்குவியல் பெறுவதற்கல்லது வேறன்றே! உமது அவாவறச் செம்பொற்குவியலைத் தருகின்றேன், வறுமையையோட்டுகின்றேன், வந்தவழியே நாடிச்செல்லுமெனத் தக்ஷகன் கூறவே, அவ்வந்தணனு மதற்கு இயைந்து அத்தக்ஷகன்கொடுத்த அபரிமிதமான செம்பொற்குவியலை யேற்றுத் தக்ஷகன் விடைகொடுப்பத் தன் நகரமே சென்றணைந்து குபேரசம்பத்துடனிருந்தான்.

இச்செய்தி அவ்வந்தணனும், தக்ஷகனு மறிந்ததன்றிப் பிறரொருவருமறிந்ததேயன்று. ஆயின், இது எங்கும் பரந்தவகையுமுண்டு! அஃதியாதெனின் தக்ஷகன் அம்மரத்தினைத் தீண்டியபொழுது அந்தணர் குமரர்இருவர்! அம்மரக்கிளையொன்றில் இலைபறித்துக்கொண்டு நின்றனர்! அம்மரம்பட்டவழி பட்டுத் தழைத்தவழி அதனோடுயிர்த்து வந்தனர். அவரால் இச்செய்தி யெங்கும் பரவிற்று. இதுகிடக்க; தக்ஷகனோ விரைந்து நாமெப்படி சென்றெய்துவது! இவ்வடிவங்கொண் டணைந்தால் இக்கட்டுக்காவல் கடந்து சாபமொழி நிறைவேற்ற வொண்ணாதே! என்செய்வோம்! என்றோருவாறு துணிந்து நாமினி வேற்றுருக்கொண்டு செல்வதே நலமென்று ஒருவேதியனாக உருக்கொண்டு சென்று தன் விஷத்தினை ஓர் எலுமிச்சங்கனி யாக்கிக்கொண்டு கையிலேந்திக் கடலருகே வந்து அரசன் வைத்திருக்கின்ற காவலைக்கண்டு வியந்து அம்மண்டபத்திற் சென்றான். அங்கிருந்த காவற்காரர் இவனோர் அந்தணனாமெனத் துணிந்துவிட விரைந்துசென்று அரசனிருக்கையை யணுகினான். உடனே உன் தாதையாகிய பரீட்சித்து ஓடோடியும்வந்து அழைத்துக்கொண்டுபோய் ஒரு அழகிய பொற்பீடமளித்து அதிலெழுந்தருளி யிருக்கச் செய்து உபசரித்தான். வந்தவேதியன் அரசனுக்கு ஆசிகூறி அப்போதேனும் சற்றுமிரக்கமென்பதேயில்லாமல் அரசன்கையில் அவ் வெலுமிச்சங்கனி கொடுத்தான். கபடவேடங்கொண்டுவந்த தக்ஷகன் எலுமிச்சங்கனியை மகாப்பிரசாதமென் றெண்ணி அதுமிகமணங் கமழ்வதைநோக்கி அக்கனியை மோந்தான்; மோக்கவே தான்கொண்ட வேதியவடிவங்கரந்து பூநாகத்துருக்

கொண்டு உன்தாதைதமூக்கினைக் கவ்விமறைந்தான். அக்கணமே உன்தாதை பரமபதஞ்சேர்ந்தான்.

இச்செய்தியை யுணர்ந்த மந்திரிமார்முதலிய பரிவாரங்கள் அறிந்துவந்து அரசனுக்குச் செய்யவேண்டிய சரமகாரியநடத்திப் பின்னர் அத்தினபுரியை யடைந்து உனக்குப்பட்டாபிஷேகஞ்செய்து முடியரசனுக்கினர். மாபாதகனுகிய தக்ஷகன் செய்தகுற்றம் என்னிடத்தினும்,உன்னிடத்தில் இவ்வளவென்று சொல்லத்தக்கதோ! முடிவேந்தர் சிகாமணியேயென்று உதங்கமுனிவன்கூறுகின்றான். "கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ் களைகட்டதனெடுநேர்" என்றபடி இத்தகு கொடும்பாதகனையும், அவனெடுசம்பந்தப்பட்ட நாகராஜனையும் கொலைசெய்வதிற் குற்றமுண்டாமா? நீதடையில்லாமல்சர்ப்ப யாகஞ்செய்வதே மிகவுநலமென்றனன். அதுகேட்டு ஜெனமேஜெயமகாராஜன் கடுங்கோபங்கொண்டு அத்தக்ஷகனையும், அவனேடு சம்பந்தப்பட்டவரையும் இக்கணத்தே நாசமாக்குகின்றேன். அச்சர்ப்பயாகத்தின் விதியென்ன? அதற்கு யாதுவேண்டுமென உதங்கமுனிவன் கூறுகின்றன்.

### சர்ப்பயாகச்சருக்கம்.

வேதவேதாந்தங்களில் வல்லோராகிய அந்தணரையும், ஐம்பொறியடக்கிய மாதவரையும் வருவிக்கவேண்டும், அவ்வேள்வியைச் செய்தற்கு விசாலமான இடமேற்படுத்தவேண்டும். அவ்வேள்விக்குவேண்டும் ஓமத்திரவியம், சமித்துமுதலியவையையழைப்பிக்கவேண்டும் என்றுகூறக்கேட்டு,ஜெனமேஜெய மகாராஜன் தன்னமைச்சர்க்குக் கட்டளையிட்டான். அவ்வாறே கட்டளையையேற்ற அமைச்சரும்முனிவர்கட்குநிருபங்களையனுப்பி, பின்னர் அங்க,வங்க, கலிங்க, காம்போஜ, மிலேச்ச, மலையாளமுதலிய தேசராஜர்களுக்கு முடக்கோலையனுப்பியபோது தூதுவர் அரசன்கட்டளைப்படி மலை,வனம், ஆறு, தேசமுதலியவை கடந்து அவ்வத்தேசராஜர்கட்கும் கொடுத்துத்திரும்பினர்.கொடுத்தபத்திரங்களைக்கண்டமன்னரும் தம்பரிவாரங்களோடுதாமதமின்றி வந்து தத்தமக்கு விட்டிருந்தவிடுதிகளிற் சேர்ந்தனர். முனிவரும் கண்டவுடன் தம் மாணுக்கருடன் அரசன் ஒன்றுசெய்ய முனைந்து நம்மைவருவித்தால் போகத்தான்வேண்டுமெனத்துணிந்துதிரண்டுவந்தனர். அரசனும்அவர்கள் எதிர்சென்றழைத்துஅர்க்கியபாத்ய முதலிய சோடசோபசாரங்கள் செய்யப்பெற்றுத் தாம் அவனிட்ட பொற்பீடத்தில் எழுந்தருளியிருந்தனர்.

இவ்வாறு எழுந்தருளியிருந்தமுனிவர் அரசனைநோக்கி மகாராஜனே! என்னதாமசம்? இனித்தாமசமொன்றுஞ் செய்யாமல் குறித்த சர்ப்பயாகத்தை நிறைவேற்றென்று கட்டளையிட,அரசர்பெருமான் வசிட்டபகவானையும், கலைக் கோட்டுமுனிவரையும், வியாசமுனிவரையும் ஆசிரியராகக்கொண்டு தன்மனைவியோடுசென்றுநீராடி யாகதீக்ஷைசெய்துகொண்டு, அழகியபீடத்திலிருந்துகொண்டு வேத வேதியர் மந்திரவுருச்சபிக்க யாகஞ்செய்யவே, மண் விண் பாதலமென்னு மூவுலகங்களிலுமுள்ள நாகங்களெல்லாம் திரண்டு

திரண்டுவந்து வேள்வித்தீயில் விழுந்து மடிந்தன. கத்துருமக்களின் சந்ததி மடிந்துசாம்பராயினது மல்லாமல் கத்துருமக்களாகியகாத்தவேயரும் மந்திரவலியால் உடல்தளர்ந்து கழிபெருந்துன்பமடைந்தனர். அவருள் ஆதிசேடன், தக்ஷகன், அனந்தன், வாசுகி ஒழியஏனையோர் வந்துவிழுந்துமாண்டுபோயினர். அரசர்பெருமான்வியாசபகவானைநோக்கி இன்னும் தக்ஷகன்முதலானோர் வரக்காணேமே! வாராமை யாதுகாரணம்? அவர்களையும் வருவிக்கவேண்டுமென்று வேண்டிக்கொண்டான். வியாசமுனிவரும் மந்திரதேவதைகளைத்தூண்டவே, அவர்களோடோடியும்விரைந்துவந்து ஆதிசேடன்முதலானோரைச் சுற்றிக்கொண்டிழுக்கத்தொடங்கினர். அதனால் அவர்கள் நெஞ்சங்கலங்கித் தாயிட்டசாபங்கருதித் துன்பத்திற்குள்ளாயினர்.

இவருள் தக்ஷகன் இந்திரனுலகமடைந்துஆகண்டலனைவணங்கி உம்மைப் புகலடைந்தேன். என்னை ஜெனமேஜெயமகாராஜன் செய்யும் சர்ப்பயாகத்தில் விழுந்து மடியாமற் காக்கவேண்டுமென்று முறையிட்டான். இயல்பாக உலகில் அரசராவார் தம்மைப்புகலடைந்தாரைக்காக்கின்றனர். நாமோதிரிவித வுலகத்தையும் ஆளும் உரிமைபூண் டிருக்கின்றோம், நாம் ஒரு நாகராஜனைக் காவாதொழிந்தால் நமதுமாட்சிமையாதென்றுநினைந்து நீ ஒன்றுக்கும் அஞ்சாதை! நினக்குக்கேடு சூழாவண்ணம் காக்கின்றேன் என்று உறுதிமொழிபுகலத் தக்ஷகன் இந்திரன் சார்பிலேயிருந்தனன். பின்னர்இரண்டாயிரயோசனையுயரமான மந்தரகிரியைஇரண்டாயிரஞ் சுற்றுச்சுற்றிக் கொண்டுவந்து தேவர்களுக்கு உதவிய ஆதிசேஷன் மந்திரதேவதைகளின் வருத்தத்துட்பட்டு நாமெவ்வாறுய்வோம்! என்று மனமாழ்கித் தன்னையீன்றுளாகிய கத்துருவையடைந்து, அன்னே! 'ஆய்ந்தாய்ந்து பாராதான் தான்சாகக்கடவன்' என்னும் பழமொழிப்படி நீ சிறிதும் முன்பின் ஆய்ந்துபாராமல் இக்கொடுஞ்சாபமளித்தனை! என்னோடு நால்வரேயொழிய மற்றையுடன்பிறந்தாரும், சந்ததியோடுமாண்டனர். இதோ நானும் மாளப்போகின்றேன் என, அதைக்கேட்ட கத்துருவும் ஈன்ற வயிறெரியக் கோவென்று கதறியழுதாள், சலர்க்காரையாகிய தங்கையும் புலம்பினள். ஆதிசேஷனே தன்றங்கையைநோக்கித் தங்காய்! இனிச்செய்யலாவதொன்றில்லை. மிகுதியாய் நின்ற நாங்கள் உய்யவேண்டுமென்று கருதினால் உன்மகனாகிய அத்திகனையனுப்பி ஜெனமேஜெயமகாராஜன்இயற்றும் சர்ப்பயாகத்தை நிறுத்தக் கேட்டுக்கொள் என்றான். சலர்க்காரையும்மகனிடமடைந்து அப்பா! மகனே! உன் மாதுல ரொருவ ரொழியாமே சர்ப்பயாகத்தில் மடிகின்றனர், நீ சென்று சர்ப்பயாகத்தை நிறுத்தக் கேட்டுக்கொள் என்றாள். அவ்வாறேசெய்கின்றேன் என்று தன்தாயை மும்முறை வணங்கி விடைபெற்று அத்தினபுரியை யடைந்து, தன்வரவைத் தூதுவரால், அரசனுக்கறிவித்துக் கட்டளையால் யாகமண்டப மணுகி அங்குள்ளமுனிவரை யெல்லாம் வணங்கிநின்றான். அரசனே இவர் பெருந்தவ முடையாரென்று விரைந்து சென்று வணங்கிப் பொற்பீடமளிக்க அதன்மேல் அத்திகமுனிவ னெழுந்தருளிஅரசனைநோக்கிக் கூறுவானாயினன்.

அரசர்பெருமானே! போரில் வெற்றிகோடற்கும், புகழ்க்கும், வாய்மைக்கும், அருட்கும், தானத்துக்கும், வேள்விக்கும், அரசுக்கும், செல்வத்துக்கும், அழகுக்கும், ஆண்மைக்கும், நீ யொருவனேயல்லது நின்னிற்பிறரில்லை யென்பது நிலவுலகமேகூறும். திருமாலி னவதாரமாகிய வேதவியாசபகவானே ஆசிரியராக வமைந்திருக்கையில் நினக்கென்னகுறை! நீயிம்மூவுலகத்தையும் அழிக்கக்கருதினுஞ் செய்தேமுடிப்பை; அத்துணை ஆற்றலையுடைய நீ நின்பிதாவைக்கொன்ற தக்ஷகனைக்கொல்லக் கருதி ஏனை நாகராஜரை யெல்லாம் சாகச் செய்தனை? நினக்கொப்பாவார் யாவரிருக்கின்றனர்! உன் முன்னோரில் விஜயன் அபிமன்னுவைக் கொன்ற சயிந்தவனைக் கொல்கின்றேன் என் றுறுதிகூறி மறுநாள் அந்திப்போதிற் கொன்றான். நீயும் அவ்வாறே செய்தனை. உன்னைப் போலும் பேராற்றலை யுடையார் பிறரில்லை யாகலின் யான் ஒருகாரியமாய்வந்தேன் என; அரசன் இவ்வாறு கூறுவது நோக்கி இவர் யாரோ மகாநுபாவர்; என்பால்வந்தகாரியம் இன்னதென்றுணர்த்தினால் என்னுயிரைக் கேட்பினுந் தாமதமின்றித் தருவேன் எனக் கூற; அதுகேட்டு அத்திகமுனிவன் கூறுகின்றான். பரீட்சித் துதவியபாலனே, பல்கலையுணர்ந்த சீலனே, இப்போது நீ கொண்டிருக்கும் யாகதீக்ஷையை மேற்கொண்டகோல மொழியவேண்டு மென்றே யான் நாடிவந்தேன்; இதுநான் என்வேண்டுகோளென அரசர்பெருமான் யாகமண்டபத்தி லிருக்கும் அருந்தவக்கொள்கைத் திருந்திய மனத்துமுனிவரை நோக்கினான். அதுகண்ட முனிவரும் இம்முனிவர்கருதியவண்ணம் வேள்வியை நிறுத்துவதே நலம், இவரோ சலர்க்காரமுனிவர் மைந்தர், தேவரும் பரவும் சிறப்பினையுடையார், இவர் வாக்குக் கெதிர்வாக்கே கூறவேண்டாம் என, அரசர்பெருமானும் அத்திகமுனிவனை வணங்கி நின்று, தங்கள் கருத்தின்வண்ணம் வேள்வியை நிறுத்துகின்றேன் என்று சொல்லிவிட்டு வேதவேதாங்கமுணர்ந்த முனிவரைநோக்கி யாகபூர்த்தி செய்யுங்கோளென் றிறைஞ்சாநிற்க, மந்திரதேவதைகள் இந்திரனைப்புகலடைந்த தக்ஷகனை அவனுடன் இந்திரனையும்பிணித்துக்கொண்டு அந்தரத்தில்வந்தன. யாகபூர்த்திசெய்யவே மந்திரதேவதைகள் தக்ஷகனையும், அவனுக்குப்புகலிடந்தந்த இந்திரனையும் விடுத்தன. உடனேஇந்திரனும், தக்ஷகனுந் தத்தம்இருக்கையிற் சென்றடைந்தனர். இதுகிடக்க,

பரீட்சித்துமகாராஜன் மைந்தனாகிய ஜெனமேஜெயமகாராஜன் யாகபூர்த்திசெய்துநான்மறையுணர்ந்த வேதியருக்கெல்லாம்வரையின்றிப்பொருள்கொடுத்ததுமல்லாமல் சோடசமகாதானங்களும்வழங்கிஅவர்களிருக்கைக்கெழுந்தருளச்செய்வித்து, அருந்தவமுடைய முனிவரையெல்லாம்உபசரித்துவணங்கி விடைகொடுத்துஅவரவர்ஆச்சிரமஞ்சென்றபின்னர்,வேந்தர்கட்கு அவரவர்களுக்கியைந்தவண்ணம்மரியாதைசெய்துஅவரவர்நாட்டிற்செலுத்தினான்.அதுகண்டு அத்திகமுனிவன் சொல்லுகின்றான். மகாராஜனே எனக்கு நீகொடுத்தவரமொன்றே இவ்வகைத்தென்று இயம்பும்பகுதியதன்று; ஊழிதோறூழி யுயர்ந்த உமையொருபாகன் அணிகலன்பெற்றதும், மருதிடையேதவழ்ந்தகள்ள

மாமாயன் பாயல்பெற்றதும், உந்திவந்தவொருவன் பெருமையுற்றதும், வயிர வேதியையுடைய வலாரியுயிர்பெற்றதும், மற்றையமரர்தாமும் தமக்குமருந்து தவுந் தாம்பினைப்பெற்றதும் அவ்வரத்தினாலேயேயன்றோ? உலகமும் களிப்புடன் இருக்கப்பெற்றதும் இதனாலேயேயென்று துணியவேண்டும். மண்டலேசனே! உன்புகழ்க்கினியாவர் நிகராவார்? ஒப்பொருவரில்லா வுத்தமனே யென்றுவாழ்த்தி, அரசன்பால் விடைகொண்டேகித் தன் தாயாகிய சலர்க்காளையை வணங்கி அவட்கு நடந்தவரலாற்றினை முற்றுமுரைத்துத் தான்தவஞ்செய்யச்சென்றான், இதுகிடக்க,

புரவலர்பெருமான் என்தாதைபாகியவிண்டிராதன் இவ்வாறுநாளும்யாது செய்துகொண்டிருந்தனனென அதற்கு உதங்கமுனிவன் கூறுகின்றான். சந்திர குலமணிவிளக்கே! நின்பிதாவாகிய பரீட்சித்து அவ் வாறுநாளும் சராசரங்களெல்லாமேனென்றுரைக்கின்ற பெருந்தவச் சுகமுனிவன் புராணரத்தினமாகிய ஸ்ரீமகாபாகவதபுராணங்கூறக் கேட்டிருந்தனன் எனக்கூறக்கேட்டு மகிழ்ந்துஅவ்வுதங்கமுனிவனைவணங்கிவிடைகொடுத்தனுப்பினன். பின்னர் புரவலர் பெருமான் அறநூல்கூறியவண்ணம் பழிக்கஞ்சிப் பாத்தூணல்கிப் பார்புரந்து வந்தான். இவ்வாறு புரந்துவருநாளில் ஒருநாள் ஜயமுனிவர், சுமந்துமுனிவர், பயிலவமுனிவர், தேவலமுனிவர், நாரதமுனிவர்என்னுமாணுக்கருடனும் பரந்தாமன்திருவவதாரமெனப்படும் வியாசபகவானெழுந்தருளிவந்ததைஒற்றராலுணர்ந்தஇறைமகன்அவரைச்சென்றழைத்துஅழகிய பொற்பீடத்திருத்தி, கைந்நீர் அடிநீர் முக்குடிநீருதவி நீராட்டி ஆடைசாத்தி முப்புரிநூலுதவி தேய்வை பூசி மலர்புனைந்து மஞ்சளரிசிதூவி நறும்புகைகாட்டி விளக்குக்காட்டி ஆரத்தியெடுத்து அமுதமேந்தித் தாம்பூலமுதவி மந்திரமலரா லருச்சித்துநின்று ஒருமொழிகூறுகின்றான். பரந்தாமன் வடிவமாகிய அமலனே! தேவரீர் வமிசோத்தாரகராயும் குலகுருவாயும் விளங்குவதனால் ஈராம்பதின்மரும் ஐவரும் பகைத்துப்போர்செய்தமையும்அவருள் ஐவர்வென்றமையும் உலகமறியுமே! ஐவரோ சத்தியவான்களென்னப்படுகின்றனரே! சுயோதனாதியர் உமது சொற்கேளாரோனும் பாண்டவர் கேட்டிருப்பரோ, நீர் 'தெருச்சண்டை கண்ணுக்கின்பம்' என்னும் பழமொழிக் கிணங்க உபேட்சையா யிருந்துவிட்டீரென வியாசமுனிவர் கூறுகின்றார்.

தராதிபனே! நீ சொன்னதனாலெனக்கோர் குற்றமேயில்லை, நீயோசிறுகுழந்தை! ஆதலால் இம்மொழியெடுத்துக்கூறினை! இன்றுபத்தாநாள் உனக்கோர்பிரமகத்திதோடம்வரும்; அதனைத்தவிரற்பாலையோ!ஊழாற்றேன்றுவதகென்செயக்கடவோம்! என்னை நொந்தாவதென்னென்று தானும் தன்மாணுக்கரோடும் விடைபெற்றுச்சென்றனர். பின்னர் அரசர்பெருமான் எக்கலையும் உணர்ந்த அந்தணரைவருவித்துஎனக்கின்று பத்தாவதுநாள் ஒருபிரமகத்திவரவதாயிருக்கின்றது,அதுவாராதிருக்கச் சூழ்ச்சியொன்றுகூறுங்கோளென்றான். அதற்கு அம்மறையோரும் ஓமங்களானும் வேள்வியானும் எவ்வகைப்பட்டபாவமும்நிவர்த்தியெய்தும்,நீர்அல்லும்பகலும்ஒழியாமேமந்திரமுச்சரித்து

ஓமஞ்செய்வீரேல் அப்பிரமகத்தியணுகாதென்றனர். அரசனே அவ்வாறு ஈரைந்துநாளும் ஊணுறக்கமிகந்து செய்யவல்லாருளரேல் வாருங்கோளெனப்பறையறைவித்தனன். அதுகேட்டியாவரும் சும்மாவிருந்தனர். வறுமையால் மிகவருந்துகின்ற விருத்தவேதியனொருவன் நமதுவறுமை யருமையாகுமென்றுகருதி அரசனுக்காசிகூறிப் பத்துநாளுமிருந்து யானே அவ்வோமத்தை முடிப்பிக்கின்றேனென்றான். அரசன்மகிழ்ச்சியெய்தி அவ்வேதியனைக்குருவாகக்கொண்டு ஓமமண்டபத்திற்சென்று வேதியன்மந்திரமுச்சரிப்ப ஒன்பதுநாள் வரையும் வேள்விசெய்துவந்தான். பத்தாநாளிரவிலோமத்தைநடத்தும்வேதியன் முதுமையடைந்த உடம்பினனாகலின் ஒன்பதுநாளும் இரவினும் பகலினும் கண்விழித்திருந்தமையானும், மிக்கதளர்ச்சியுடைமையானும், வலியின்மையானும,மந்திரமுச்சரித்துக்கொண்டே நித்திரித்தான். அந்நித்திரையில்அவ்வேதியன் தானொருபெருங்காட்டிற் சென்றதாகவும்,ஆண்டொருபுலி தன்மேற் பாய்ந்துகொல்லத்துணிந்ததாகவும் கனவுகண்டுகொணடிருந்தான். அப்போது அரசர்பெருமான் இதென்ன மந்திரமுச்சரித்துக்கொண்டே வேதியன் நித்திரிக்கின்றான்என்றுதன்கையிலுள்ளதருப்பையினா லவ்வேதியனைத்தொட்டான்.

வேதியனோ மிகப்பயந்து ஓமத்தீயில்விழவே சாம்பராயினான். அரசனுக்கு வியாசபகவான் சொற்படிகுறித்தகாலந் தவறாமல் பிரமகத்திவந்து நேர்ந்தது. அரசனோமயக்கமுற்று, இதென்ன! நாம்வேதியனைத் தருப்பையால் தொடவும், அவன் வேள்வித்தீயில் இறக்கவும் நேர்ந்ததே, யாதுசெய்வது! இதனாலன்றோ 'வினைப்பயனை வெல்வதற்கு வேதமுதலா-மனைத்தாய நூலகத்துமில்லை' எனப்பெரியோருங் கூறுகின்றனர். நங்குலகுருவாகிய வியாசபகவான் உரைத்ததே பிரமாணமெனத்தகும். இனி நமக்குநேர்ந்த பிரமகத்தியை நமது குலகுருவாகிய வியாசபகவானாலேயே நீக்கிக்கொள்ளவேண்டும் என்று எண்ணி வியாசமுனிவரைப் பலவாறுதுதித்தான். துதித்தாங்கு அரசர் பெருமானுக்கு நேர்ந்தபிரமகத்தி துடைப்பதுபோன்று உலகிருள்நீங்கப் பரிதியங்கடவுளும் பசுங்கடலிற் றோன்றினான். வியாசபகவான் தம் மாணாக்கருடன் எழுந்தருளவே அரசர்பெருமான் விரைந்து எதிர்கொண்டு அழைத்துச் சென்று ஒருபொற்பீடமளித்து அதிலெழுந்தருளி யிருக்கச்செய்துசோடசோபசாரஞ்செய்து கைகட்டி வாய்புதைத்துநின்று ஒரு வசனம் கூறுகின்றான்.

பராசரன்மைந்தனாகிய பாற்கரனே! பரிபவந்தொலைக்கு மெய்ப்பரனே!உமதுமகிமையை யுணராமல் என்னறிவின்மையால் சொன்னபிழை அத்தனையும் பொறுக்கவேண்டுகின்றேன். நானறியாமலேயிருக்கப் பிரமகத்திநேர்ந்தது மிகவுமதிசயமே! அதுவந்தவகையும் அதற்குக் கழுவாயும் யாதென்று அரசர்பெருமான் கேட்டனன். அதற்குவியாசபகவான் மதிகுலவரோதயனே! உனக்கு ஓமஞ்செய்வித்த கிழவேதியன் பெருங்கானிலடைந்து புலிதுரத்தக் கனவுகண்டான். நீ மந்திரத்தை வாயால் உச்சரித்துக்கொண்டே தூங்குகின்றானெனத் தருப்பையால்தொட்டனை, அவன் புலிபாயத்தொடரக் கனவு கண்டுகொண டிருந்தமையால் மிகப்பயந்து தீயில்வீழ்ந்து மாண்டான். அதற்

குப்பிராயச்சித்தமும் சொல்லுகின்றேன். அதாவது நீ உன்முன்னோர் சரித்திரமாகிய பாரதகதையைக் கேட்கவேண்டும். அது வேதத்தோடொருபுடையொத்திருப்பதனால் மகாபாரதமெனப்படும். பரதராசன் வமிசத் தரசர் சரித்திரமென்றே கருதிக்கேவலமாக நினையாதொழி; முனிவரெல்லாம் துரியோதனன்பால்தூதுசென்ற கண்ணபிரான் ஏற்றமும்,அவன்பார்த்தனுக்குக் கீதாசாரியனாக இருந்து கீதையருளிச்செய்தமையும், அதனோடு உத்தரகீதையும்இருப்பதுபற்றி இதனை மகா வென்றே அடைகொடுத்து இவ்வகைப்பட்ட பாரமான பொருளிருப்பதனால் மகாபாரதமெனவும்,கேட்போர்க்குளஎவ்வகைப்பட்டதுன்பமும்போக்குந்தன்மையால் ஸ்ரீமகாபாரதமெனவுங்கூறுவர். இதனைக்கேட்பதனால்பிரமகத்திநீங்குவதன்றிஉன்முன்னோருடைய வரலாறும் நன்குவிளங்கும். இதனதுசிறப்பையான்சொல்வதோ அரிது. எல்லாமாயல்லவுமாயிருந்த கல்லாலின்மலை வில்லாரருளிய கருணைமதம்பொழியுங் கயமுகத்திறைவன்மா மேருவே யேடாகப்பிடித்துக் கயமுக வசுரனைக்கொன்ற ஓர் சிறந்தகோட்டாலெழுதியதெனின் அதன்சிறப்பினை என்னொருநாவாலெடுத்துச்சொல்ல வல்லதோ! அதைக்கேட்போர் பெறும்பயனையும் இவ்வளவினதென அளவிடவும் போமோ! என்று கூறக்கேட்டு அரசன் தங்கள்கட்டளையின்படி அவ்வாறே கேட்கின்றேனென்றான்.

வியாசமுனிவர் தன்னருகிலிருந்த வைசம்பாயனரை நோக்கி நமது ஜனமேஜயன் கேட்டுச் செந்நெறிப்படர ஸ்ரீமகா பாரதத்தை நன்குவிளக்குகவென்று கட்டளையிட்டுத் தாம்விடைபெற்றுப் பதரிகாச்சிரமமே நோக்கிச்சென்றனர். பின்னர்வைசம்பாயனரும் அவர் கட்டளையையேற்று அரசர்பிரானையும் அவர்மனைவியையும் நீராடி நறுந்துகிலுடுத்துவரக்கட்டளையிட்டுச்சுசியான இடத்தில் இருந்துகொண்டு அரசன்செய்த வந்தனைவழிபாடுகளையேற்றுப் பல ஆசிகள் வழங்கி ஸ்ரீமகாபாரதத்தைச் சொல்லத்தொடங்கினர். அரசனும் மகாபாக்கியமென்று கேட்கக் கொலை, களவு, கள், காமம், பொய் என்னும் ஐம் பெரும்பாதகங்களையும் முற்றுமழிக்கவல்ல இம்மகாபாரதத்தைச் சொல்லுகின்றேனென்று நைமிசாரணியத்துள்ள சௌனகர்முதலிய முற்றத்துறந்த முனிவர்களுக்குச் சூதமுனிவர்சொல்ல, அவர்களும் அவர் கேட்டவண்ணம் எங்களுக்கு விளங்கச்சொல்லவேண்டுமெனச் சூதமுனிவர் கூறுவாராயினர்.

வரலாறு முற்றுப்பெற்றது.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.

ஸ்ரீ

கிருஷ்ணசகாயம்.

# ஸ்ரீமகாபாரதவசனம்

## ஆதிபர்வம்.

### கலிவிருத்தம்.

*கய்யி லாழி யெடுத்தருள் கண்ணனை*
*மய்யு லாமழை வண்ணனைப் பாண்டவ*
*ருய்ய வந்துத யஞ்செய்த பானுவை*
*வய்ய முண்டசெவ் வாயனை வாழ்த்துவாம்.*

வியாசபகவானை மனமொழிமெய்களால் வணங்கிநின்று சூதமுனிவர் நைமிசவனத்து முற்றத்துறந்த முனிவர்களாகிய சவுனகர்முதலானோரை நோக்கி,வபுஷ்டாதேவியுடன் ஜெனமேஜெயமகாராஜன் நீராடிச்சுத்தமான ஆடையுடுத்துச் சுத்தமான இடத்தில் வைசம்பாயனமுனிவரை ஓராழகியபீடத்திலெழுந்தருளச்செய்து ஸ்ரீமகாபார்தத்தைச் சொல்லுமெனக்கேட்ப வைசம்பாயனர் சொல்லுகின்றார். ஸ்ரீமகாபாரதமென்பது பதினெட்டுப்பருவம் உடையது. ஆதிபருவம், சபாபருவம், ஆரணியபருவம், விராடபருவம், உத்தியோகபருவம் இவ்வைந்தனையும் ஆதிபஞ்சகமென்ப. வீட்டுமபருவம், துரோணபருவம், கர்ணபருவம், சல்லியபருவம், சௌத்திகபருவம் இவ்வைந்தனையும் உயுத்தபஞ்சகமென்ப. ஸ்ரீபருவம், சாந்திபருவம், அநுசாசனீகபருவம் இம்மூன்றனையும் சாந்தித்திரையமென்ப. அசுவமேதபருவம், ஆச்சிரமவாசபருவம், மவுசலபருவம், மகாப்பிரத்தானிகபருவம், சொர்க்காரோகணபருவம் இவ்வைந்தனையும் முத்திபஞ்சகமென்ப. சுயோதனாதியர், பாண்டவரென்னும் இவ்விருதிறத்தர் சேனையளவோ பதினெட்டக்குரோணி யெனப்படும். ஒரு அக்குரோணிசேனையளவோ எடுத்துக்கூறுகின்றோம். தேர் - க, யானை - க, குதிரை ங, காலாள் ரு, இங்ஙனஞ்சேர்ந்த பிரிவைப் பந்தியென்பர். அதுமூன்றுகொண்டது சேனாமுகம் ; இதுமூன்றுகொண்டது குமுதம் ; இதுமூன்றுகொண்டது கணகம்; இதுமூன்றுகொண்டது வாகினி; இது மூன்றுகொண்டது புலுதம் ; இது மூன்றுகொண்டது சமுத்திரம் ; அது பத்துக்கொண்டது அக்குரோணி. இதனையேஅக்ஷோஹிணி என்றுங் கூறுவர். ஒரு அக்குரோணிக்குத் தேர் இருபதினாயிரத்து எண்ணூற்றெழுபது ; யானையும் அவ்வளவினதேயாம். குதிரையோ அறுபத்தையாயிரத்து அறுநூற்றைம்பது ; காலாட்படையோ பத்தொன்பதினாயிரத்து மூந்நூற் றைம்பது. இது ஏழுகொண்டது பாண்டவர்சேனை; பதினொரக்குரோணி சுயோதனாதியர் சேனை. இவர்கள்போர்க்

கோலங்கொண்டு போர்செய்தநாட்கள் பதினெட்டு, பாண்டவருக்கு முதனுளில் சுவேதன்சேனாதிபதியாயிருந்தான். மறுநாள்முதல் பதினெட்டாநாள்வரையும் திஷ்டத்தூய்மன் சேனாதிபதியாயிருந்தனன். சுயோதனனுக்கும் பத்துநாள் வீட்டுமனும், ஐந்துநாள் துரோணனும், மூன்றுநாள்கன்னனும், மற்றையொருநாள் பதினைந்துநாழிகைவரையும் சலலியனும், மற்றைப்பதினைந்து நாழிகைவரையும் தானும் சேனாதிபதிகளாயிருந்து போர்செய்யவேபாண்டவர் அறவாழியந்தணன்கருணையால் வெற்றிகொண்டு ஆழிசூழ்புவியனைத்தும் அரசாண்டு அயர்வறும் அமரர்கட்கிறைவன் ஈறிலின்பம நலகுந்திருநாட்டையடைந்தனர்.

இம்மகாபாரதத்தை வடமொழியில் எமதுகுருவாகிய ஸ்ரீவியாசபகவான் நூற்றிருபத்தையாயிரம் கிரந்தமாகவெளிப்படுத்தினர். அவரதுதிருவவதாரத்தை முன்னேயெடுத்துரைக்கின்றேன். கடல்புடைசூழுங் காசினியதனில் நீர்வளம், நிலவளம், குடிவளமிக்க எந்நாட்டினுஞ் சிறந்தநாய்ச் சேதிநாடென்றோர்நாடுண்டு. அந்நாட்டில் உலகமுழுதும் தன்னடிநிழலிலொதுங்கமனுமரபில் வசுவென்னும அரசன் ஆறிலொருகடன்மைகொண்டு செங்கோல் செலுத்திவந்தான். அவன் தன்மந்திரிமாரமுதலிய பரிவாரஞ்சூழக் காட்டிற்புகுந்து வேட்டையாடி விடாய்கொண்டு முற்றத்துறந்தமுனிவர்தவஞ்செய்யுஞ்சூழலையணுகினன். அங்குத்தவஞ்செய்கின்ற முனிவரொழுக்கநோக்கித் தவத்தினுஞ்சிறந்ததோர் பொருளைக்கண்டிலோம் ஆதலின்தவஞ்செய்வதே யுசிதமெனத் துணிந்து தன்மந்திரிமாரைக்கூவி, இனித்தவஞ்செய்வதினுஞ் சிறந்ததோர்பொருள் இன்றெனத் துணிந்து தவஞ்செயத்துணிந்தேன். நீவிர என்சொற் கடவாமல் யாக்கும சிறிதேனுங் குறைவெய்தாவண்ணம அரசாண்டு வாருங்கோள் என்று தன்முத்திரை மோதிரமுங் கொடுத்தனுப்பினன். மந்திரிமார முதலானோரும் அரசன்குறிப்பினைக்கண்டு இனித்தடுப்பதோ முறையன்று என்பது துணிந்து தாம் தமது நாட்டினையணுகி அரசன்கட்டளையின்படி அரசாண்டு வந்தனர். வசு அரசனே முனிவர்பாற்சென்று வணங்கி அன்னோர் இன்னருள் பெற்றுத்தவநிலைசோந்து தவஞ்செய்து இருந்தான். இவ்வாறு அரியதவஞ்செய்வதைநோக்கிப் புரந்தரன் பூவுலகினணுகி வசுவென்னு மன்னரேறே! உலகினுள்ள அரசருளெல்லாம் மனுகுலத்திற்பிறந்து மனுநெறிவழாது ஒழுகுகின்ற நீ இக்கானில் அருந்தவஞ் செய்வானேனென வசுராசன்சொல்லுகின்றான்.

கற்பகநாட்டிற்கரசே! 'ஒன்னார்த்தெறலு முவந்தாரையாக்கலும் எண்ணிற்றவத்தான்வரும்' என்றபடி தவமே எல்லாச்சிறப்புந்தருமென்பதுகருதி யான் தவஞ் செயப்புகுந்தேனென்றுகூற, புலோமிசைகேள்வன் நீதவத்தினுஞ் சிறந்தபொருள் வேறொன்றில்லையென்றனை, அஃதுண்மையே! 'அத்தவமும் அரசிலாரில் வழியில்லை, என்றும் மேலோர்கூறினமையான் அத்தவத்தினும் அரசாள்வதே சிறந்தது. அவ்வரசினை மனுநெறிவழுவாமல் காத்தோம்பலேதவத்தினுஞ் சிறந்ததாகும். ஆதலின் நீ அரசுசெய்தே பெறலரும்பயன்துய்ப்பாயென்று கூறி, பின்னரும் நீ யாது வரம்வேண்டினும் தருகின்றேன், தவநிலை

விட்டெழுக என்றனன். அதுகண்டு வசுராசன் ஆகண்டலனைவணங்கி யான் எவ்வுலகங்காண விழைகின்றேனோ அவ்வவ்வுலகைச்சென்று காணவேண்டு மென்றிரந்து கேட்ப, அவ்வாறே பெறுதியென்று அரசன்கருத்தின்வண்ணம் ஒருதெய்வ விமானமு முதவி, பகைவரை வெற்றிகொள்ள ஓர்காலதண்டமும், கமலமலர்மாலையும், பொன்னிறமும் அளித்துத் தன்னிருக்கையாகிய அமராவதிக்கெழுந்தருளினன்.

வசுராசன் அவ்வாறு இந்திரனிடத்துப் பல வரங்களையு மேற்றுத் தவநிலை விட்டெழுந்து தவக்கோலம் ஒழிந்து தன்னாட்டிற்குமீண்டும் வந்து கங்கை முதலிய புண்ணிய தீர்த்தங்களில் நீராடி முடிபுனைந்து அரசனாயினன். தான் அரசாளுங் காலத்திலே தனக்குப் பெறலரும் வரங்கொடுத்த இந்திரனுக்கு திருவிழாக்களையும் நடத்தி வந்தான். அந்நாடு நீர்வளம், நிலவள மிக்கதாய் எந்நாட்டினுஞ் சிறந்திருந்தது. இதனை யுணர்ந்த மற்றை நாட்டரசர் இந்திரனுக்குக் கழிபேருவகை பயக்கத் திருவிழா நடத்தி வந்தனர். அவ்வாறே இவர்கள் நாடும் நீர்வளம் நிலவளம் குறையாமல் மிக்கன. இவ்வசுராசன் இந்திர னுதவிய விமானத்திலேறித் தான் எண்ணிய உலகமெல்லாஞ் சென்று திரிந்து ஆங்குள்ள அதிசயமெலலாங் கண்டு அரசுசெய்து வருநாளில் ஒருநாள் மந்திரி முதலானோர் புடைசூழ விநோதங்காண வெளிப்பட்டுச் சுத்தமதி யென்னும் ஆற்றின் பக்கமே வந்து ஆங்கும் அவ்வாறே பார்த்துத் தன் புயவலியை மந்திரிமா ருணரக் கோலாகல மென்னும் மலையைத் தன்காலினலெற்றி அம்மலையி னருகிருக்கும் அவ்வாற்றில் அதனை யெறிந்து போயினன். சுத்தமதி யென்னும் நதியோ தன்னில் வீழ்ந்த கோலாகல மென்னும் மலையினை விழைந்து நின்று தான் பெண்ணுருக்கொண்டு அம்மலைத் தெய்வத்துடன் அன்றில் விழைபோக மயர்ந்து வசுபதத்தனென்னும் புத்திரனையும், கிரிகையென்னும் பெண்மணியையும் ஈன்று நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக அவ்விரு மக்களையும் வளர்த்து வந்தது. இவருள் கிரிகையோ பேதை பெதும்பை கடந்து மங்கைப்பருவ முடையாளாய், அந்நதிக் கரையில் தனியே விளையாடிக்கொண்டிருந்தாள். வசுராசனும் தான் ஒருநாள் வேடிக்கையாகப் புறப்பட்டு அந்நதிக்கரையை விரைந்து அணுகி அப்பெண்மணி தன்னந்தனியே விளையாடிக்கொண்டிருப்பதைக் கண்டு, இப்பெண்மணியார்! தன்னந்தனியே திரிகின்றனள், மாரனும்மயல்கொள்ளும்பேரழகினள். திருவளர்தாமரைமலரும், சீர்விளங்குங்காவிமலரும், பூங்குமிழும், கோங்கும், பைங்காந்தளுமாகிய ஐந்திணைமலராலாய ஓர் பொன் மாலைகொண்டோங்கிய தெய்வதவடிவாய் என் கண்ணுக்குத்தோன்றுகின்றனள். இவள் நீரரமகளோ! வரைமகளோ! செந்தாமரைத்தவிசி லுறைபவளோ! பாரணங்கோ! யாரோ அறியேனென்று நாடி மனம்வாடி நெட்டுயிர்ப்பு நீடி நின்றான். இதனை மந்திரிமார் குறிப்பினுணர்ந்து நமதிறைவன் இப்பெண்மணிமேல் கண்வைத்தனன் என்று துணிந்து அம்மங்கையிடஞ் சங்கையின்றிச் சென்று அம்ம! நீயார்! நீ யிங்குத்தன்னந்தனியே திரியும் காரணமென்னவென, அதற்கு நான் இந்நதியின் மகள், என்பெயர்

கிரிகையென்று சொல்லுவர், நான் விநோதமாக விளையாட வந்தேனென்று கூறினள். மந்திரிமாரு மீண்டும் அரசனுக் கிதனை யுணர்த்தவே,அரசனும் அந்நதி யருகிற்சென்று பலவாறாக அந்நதியைத் துதித்து உலகுக் கன்னியாக இருக்கின்ற நீ இக்கன்னிகையை எனக் குதவவேண்டுமென்று வேண்டினன். அதை யறிந்த அந்நதி ஒரு பெண்ணுருக்கொண்டு வந்து அவ்விருமக்களையும் அவ்வரையனிடம் கையடையாகக்கொடுத்து இந்நங்கையைமணந்து நம்பியை நின்சேனைத்தலைவனாகக் கொள்ளென்று கூறி மறைந்தது.

அரசனே ஐம்பத்தாறுதேசத்தரசருக்குமணவோலை போக்கி அவர்களை வருவித்து அவர்கள்முன்பாக வேதவேதியர்ஆசிகூற,கிரிகையையென்னும் நங்கையை மணஞ்செய்துகொண்டு, வசுபதத்தனைத் தன் சேனைக் கதிபனாக்கினான். வசுராசனே கிரிகையுடன் மன்றலயர்ந்து அன்றில்விழைபோக மனுபவித்துவருநாளில் கிரிகையோ கருக்கொண்டாள். அவட்கு நல்ல மாமிச வுணவைத் தான் வேட்டையாடிக் கொணரக்கருதி மந்திரி முதலானோருடன் புறப்பட்டுச் சிங்கம், யானை, கரடி, புலி முதலிய கொடிய மிருகங்களை யெல்லாம் வதைத்துப் பின்னர் நல்ல சுவையுள்ள ஊனுணவைத்தரும் மிருகவேட்டையாடி அவற்றின் ஊனையெல்லாம் அரண்மனைக் கனுப்பிவிட்டுப் பின்னர் தன் சேனையுடன் விநோதமாக ஒரு சோலையிலிறங்கினன். இறங்கவே மந்திரிமார் முதலிய பரிவாரங்கள் அரசன் தங்குவதற்கு மாளிகை போன்று கூடார மியற்றி அதிற் சப்பிரகூடமஞ்சமிட்டு வைத்திருக்க மாலைக்காலத்திற் செய்யவேண்டிய கருமங்களை யெல்லாஞ் செய்து முடித்துப் பண்டபலாதிகள் உண்டு சந்திரோதயமாகவே தன்னந்தனியே கிரிகையை நினைத்துத் தனித்துறங்கினன். அவ்வாறு நித்திரை செய்கையில் தன் காதலியாகிய கிரிகையை யணைந்ததாகக் கனவுகாணச் சுக்கிலங் கலிதமாயிற்று. அரசன் அந்தோ! நாம் கிரிகையை நினைத்து வருந்தித் துயின்றமையால் இவ்வாறு நேர்ந்தது. இதனை வீணாக்கிற் பெருங்குற்றமாமே யென்று வருந்திச் சற்றுநேரஞ் சிந்தித்துத் தான் வளர்க்கின்ற வல்லூறைக்கூவிச் சைகை செய்து பறவை யரசே! இதனை என் மனைவியாகிய கிரிகை யிடங்கொடு வென்று அதனை இலைபறித்து வட்டிலாகத் தைத்து அதில் அச்சுக்கிலத்தை யமைத்து அனுப்பினன்.

அரசன் கட்டளைப்படியே அவ்வல்லூறும் தன் மூக்கினால் அவ்விலைவட்டிலைக் கவ்விக்கொண்டு யமுனையாற்றங்கரைவழியு மனுகிற்று. அவ்வாறு வருங் காலத்தில் அவ்வாற்றங் கரையில் ஒரு இராசாளி மிகப்பசியால் வருந்தி ஓராலின்கிளையிற் றங்கியிருந்தது. அது இவ்வல்லூறு கொண்டு செல்லும் இலைவட்டிலைக்கண்டு இதென்ன! வல்லூறு இரைகொண்டு செல்கின்றது. இதனை வழிமறிப்போமாயின் நமக்குணவு கிடைக்கும் எனச் சிந்தித்து, தான் வழிமறிக்கலாயிற்று. வல்லூறுஎன்னையேன்மறிக்கின்றனை! நான் அரசனுக்கினியிற் செல்கின்றேன். நீயோ மீளாவருத்தத்திற் கிடஞ்செய்து கொள்ளுவானேன்! என்னைவிட்டுவிடென அது நானேஉன்னை விடுவது!உன்மூக்கிற்பிடித்திருக்கும் இரையை யருந்தாமல் போகேன் என்றெழுந்து பறந்தடித்தது. அதுகண்டு

வல்லூறு நீ எனக்கெம்மாத்திரம் உன்னை வெல்வதும் அரிதாமா! நீயொரு பொருளென்றெவர் நினைப்பார்! என்று அதனை மிகவிகழ்ந்து போராடிற்று. இவ்வாறு நேர்கையில் இராசாளியின் மூக்கினால் அவ்விலைவட்டில் கிழிந்து அதிலிருந்த சுக்கிலம் இருதுளியாக யமுனையாற்றில் வீழ்ந்தது. அதுகண்டு வல்லூறு மிகப்பயந்து வந்து நடந்த செய்தியனைத்தும் உள்ளவாறு அரசனுக்குத் தெரிவித்தது. அரசனோ மறுநாட்காலையில் தன்னகரஞ் சேர்ந்து தன் மனைவியைக் கண்டு களித்து முன்போல் அரசாண்டு வந்தான்.

அந்த யமுனையாற்றில் விழுந்த இரண்டு துளியாகிய சுக்கிலத்தை அவ்வாற்றில் மீனொன்று அருந்திக்கருக்கொண்டது. அம்மீனோ அரம்பையருளொருத்தி, தாமரைப்பீடத்துச் சதுமுகனால் மீனாகச்சாபமெய்தியவள். அம்மீன் பிரசவகாலம் அணுகியகாலத்தில் ஒருவலைஞன் வலையெறிய அதில் அகப்பட்டது. அவ்வலையனோ இம்மீன் மிகப்பெரிதாயிருக்கின்றது, இதன்வயிறு மிக மோட்டுருவுடைத்து, இதை நம்மரசனிடத்தில் சேர்க்கவேவேண்டும் என்று துணிந்து தாசராசனிடத்துச்சேர்க்க அவன் அதன்வயிற்றைப் பக்குவமாய்ச் சேதித்தான். அவ்வாறு சேதித்துப்பார்க்கையில் ஒருபுத்திரியும், ஒருபுத்திரனும் இருந்தனர். 'மக்கட்பேற்றிற்பெறும்பேறில்லை' என்றபடி மக்கட்பேறில்லாமல் மனம்வருந்திய தாசராசன் பேரானந்தமெய்தி விழித்தகண்விழித்தவாறு பார்த்துக்கொண்டிருக்குஞ் சமையத்தில் மீனமாயிருந்த அரமகள் ஒருதெய்வ விமானமேறித் தாசராசனைக்கூவி அதோநின்னருகிலிருக்கிறமீன்வடிவுநானே! இவர்களோ உலகமுழுதாண்ட வசுராசன் சுக்கிலத்தால் தோன்றினோர் என்று அம்மக்கள் வரலாற்றையுங்கூறிப் பின் தன்வரலாற்றைக்கூறுகின்றாள். நான் தெய்வலோகத்திலிருக்கும் அரமகளிருளொருத்தி, நானோ பிரமதேவனிடத்துப் பூசைக்குரிய பணிப்பெண்ணாயிருந்தேன். ஒருநாள் பூசைக்குச் சலந்திரட்ட யமுனையாற்றுக்குவந்து அவ்வாற்றிலிருக்கும் மீன்களின் விநோதத்தைப்பார்த்தேன். அதனால் பூசைவேளைதப்பிப்போயிற்று. பிரமதேவனோ என்பாற்சினங்கொண்டு என்பூசனைக்குரிய வேளையைத்தவறிவரநீயாதுசெய்து கொண்டிருந்தனையென்றுகேட்டனன். நான் ஒன்றுமொளியாமல் உள்ளவாறு கூறினேன். அவர் என்னைநோக்கி நீ மீனாகுகவென்றனர். நான் நடுநடுங்கி அவரை எந்நாளிச் சாபநீங்குமென்றுகேட்டேன். அதற்கவர் வசுராசன் சுக்கிலமருந்திக் கருக்கொள்வை; உன்னை வலைஞன் பிடித்துவந்து தன்னரசனாகிய தாசராசனிடம்சேர்ப்பான்; தாசராசனோ உன்வயிற்றைச் சேதிப்பான்; அப்போது உன் சாபநீங்கிப் பழையபடியே இவ்விடம்வந்து சேருவையென்றனர் என்று கூறி அவ்வரமகள் பிரமலோகமேபோய்ச் சேர்ந்தாள்.

தாசராசனோ இவவிருவரும நமதரசன் மக்களாதலின் நாம் அவரை அரசனிடத்தொப்புவிக்க வேண்டுமென்று எண்ணி அவ்விரண்டு மக்களையும் வசுராசனிடம்சேர்த்து அம்மக்கள் வரலாற்றையுங்கூறினான். அரசனோ பெண் குழந்தையை அத்தாசராசனுக்குக் கொடுத்துவிட்டு ஆண்மகவை யெடுத்து வளர்த்துத் தக்கபருவம்வந்துழிச்சேனாதிபதியாகத்தன்சேனையிலமைத்தனன்.

பின்னர் தாசரான் சத்தியவதியென்றும், மச்சகந்தியென்றுஞ் சொல்லப்பட்ட அப்பெண்மணியை அன்புடன் நாளொருமேனியும், பொழுதொருவண்ணமு மாக வளர்த்துவந்தான். வளர்த்துவருகையில் பேதைப்பருவங்கடந்து பெதும் பைப்பருவநேரவே தான் தந்தையைவணங்கி எனக்கொரு படகுகொடுத்தால் நமது குலத்தொழிலுக்கிணங்க யமுனையாற்றிலிருந்துவரும பெரியார்க்குப் படகுவிட்டுக்கொண டிருக்கின்றேனென்று விண்ணப்பிக்க, அவ்வாறே அவன் செய்துகொடுக்கத் தான் படகுவிட்டுக்கொண்டிருந்தனள். இவ்வாறு படகு விட்டுக்கொண்டிருக்குநாளில கரியகோலத் திருவுருபபெரியோராகிய அற வாழியந்தணன் உந்திவந்தான் பிரமன், அவன்மகன் வசிஷ்டபகவான், அவன் வழித்தோன்றல் சத்தி, அவன் காதல்முனை பராசரா, அப்பராசரமுனிவர் தம்மாலுலகுக்கு நன்மையுணடாமாறு ஒருநன்மைந்தனைப் பெறுவான்கருதி, நக்ஷத்திர மிருபத்தேழில் ஒன்று உச்சமாம், அது உச்சமாகநோக்குழி ஒரு மாதினை யணையவேண்டுமென்றுகருதித் தாம அதுவரையும தவத்திலிருந்தார். அக்காலம்நேரவே அவர் தவநிலைவிட்டெழுந்து நகரத்துட்செலல மிகவிரைந்து வந்தனர். யமுனையோ மிகவுமலைகொந்தளித்துக் கொண்டிருந்தது. அவரோ அவ்வாற்றில் படகோடிருக்கும சத்தியவதியைக்கண்டார். கண்டு நான் ஒருசங் கேதமாக நகரத்துக்குப போகக்கருதி வந்தேன்; வழியில் இவ்வாறோ மிகவும் அலைகொந்தளிக்கின்றது. இதனை யெவ்வாறு கடப்பதென்று கவலகின்றே னென்றார். அதற்குச்சத்தியவதியும், உமமைப் படகேற்றிக்கொண்டு செல்வே னாயின் தக்கபாரமிலலாமல சங்கடநேரும், அதற்கென்செய்வதென்றாள். படகுக்கு எத்துணைப்பாரமவேணடுமோ அத்துணைபபாரம் உண்டாக்குவேன் ஐயமின்றிப் படகுவிடென்றுசொல்ல, சத்தியவதியும் இவா சிறந்ததவமுடை யாராகத் தோன்றுகின்றது ; நாமோதடுப்பது தக்கதன்று; 'நிறைமொழிமாந் தர் பெருமைநிலத்து மறைமொழிகாட்டிவிடும' என்றபடி இவாசொல்லே இவரதுபெருமிதத்தைவிளக்குகின்றதென்றுதுணிந்துபடகுவிடத்துணிந்தாள். பராசரமுனிவரோ படகிலேறி அப்படகுக்கு வேண்டுமபாரந் தோன்றவிருக்க வே சத்தியவதியும் இவாபெறலருந்திருப்பெற்றவரென்று கருதி மிகப்பயந்து படகுவிட்டுக்கொண்டு சென்றாள்.

பராசரமுனிவர் யமுனையில் படகிலேறிக்கொண்டு வானைநோக்கிக் கொ ண்டேசெல்கையில் தாம கருதிவந்த நக்ஷத்திரம உச்சமாகவரக்கண்டு மிக மகிழ்ந்து நாமென்செய்வது! இப்படகைத்தள்ளும் பெண்ணையேனும் விழைந்து நன்மகவைப் பெறுவதுதான் தகுதியென்று துணிந்து சத்தியவதியைநோக்கி, பெண்கொடியே இதோதோன்றுகின்றநக்ஷத்திரம் உச்சமாகவரப்போகின்றது! இதைக்கருதியேஇத்துணைவிரைந்துவந்தேன்,காரியக்கேடாகாவண்ணம்நடக்க வேண்டுமென்று கூறினர். அதற்குச் சத்தியவதியும் நீரோமுற்றத்துறந்த முனிவர்பெருமான்! நானோமங்கைப்பருவம்நேராதமாது,இணைவிழைச்சினுக்கு உரியளாகாப்பருவமுடையேன்;மேலும்உடல்முழுவதும் புலால்மணம்வீசப்பெற் றுள்ளேன், எவ்வாறு பொருந்துமென்றனள். முனிவர்பெருமான் உன்உடல்

முழுதும் பரிமளகந்தம் ஒருயோசனைவீசக்கடவது, இதனால் உனக்குப் பரிமளகந்தியெனப்பெயர்பெற்று வாழ்வை, உனக்கு மங்கைப்பருவநேரக்கடவது, பின்னர் முன்போலும் பெதும்பையாவை யென்றுகூறச் சத்தியவதியும் மகிழ்ந்து ஆயினும் பகற்காலமாயும் தெய்விகநதியாயுமிருக்க நாம் என்செய்வதென ஆற்றினிடை ஆற்றிடைக்குறையாகவும், சூரியனில் மூடுபனியுந்தோன்றி இரவு போலாகவும் தானணிந்த நீற்றினை யெடுத்தூத ஆற்றிடைக்குறையும், இரவு போலவுந்தோன்றின. சத்தியவதியும் இசைந்துஆற்றிடைக்குறையில் அம்முனிவருடன் அன்றில்விழைபோக மயர்ந்தாள். உலகமுண்டபெருவாயனும் உலப்பில் சீர்த்தியம்மானு மாயகள்ளமாமாயன் திருவவதாரமெனப்படும் வாதராயணன்,எமது குருசிகாமணி, அனந்தவேதமெனப்பட்ட அனைத்தையும் நான்ககாவகுத்த வியாசபகவான் மூன்றேமுக்கால்நாழிகைக்குள் 'ருஷிப்பிண்டம் இராத்தங்காது' என்றபடி திருவவதரித்தான். பராசரமுனிவரும் இவர்திருவவதரிப்பதற்கு முன்னடந்துசென்றனர். இவர்திருவவதரித்தவுடன்தாயை மும்முறைவணங்கி அன்னே! எந்தை யாண்டுச்சென்றானெ அதோசெல்கின்றனரென்றாள். பின் தாயைநோக்கிநீநினைத்தகாலத்தில்வருகின்றேன், அஞ்சாதையென்று தந்தையொடுஞ்சென்று தவஞ்செய்திருந்தார். சிலகாலஞ்சென்றபின்னர் வியாசபகவான் அனந்தமாகவிருந்த வேதங்களையும் இருக்கு,எசுர்,சாமம்,அதர்வணமென நான்காக்வகுத்து, மச்சியம், கூர்மம், வராகம், வாமனம், பிரமம், வைணவம்,பாகவதம்,சைவம்,இலிங்கம,பௌடிகம்,நாரதீயம், காருடம், பிரமகைவர்த்தம், காந்தம், மார்க்கண்டேயம், பிரமாண்டம், ஆக்கிநேயம், பதுமம் என்னும் பதினெண்புராணங்களையுங்கூறி, உபநிடதப்பொருளை யெல்லாம் வேதாந்த சூத்திரமாக அருளிச்செய்து, இனிநடக்கும் ஸ்ரீமகாபாரதத்தையும் வடமொழியிற் செய்பவராய் தன்பிதாவுடன் கயிலைக்குச்சென்றனர். அறுதிமலமுத்த சித்துருவாகிய பரமசிவன் பராசரனைநோக்கி நின்னுடன்வந்தான் யாவனெனப் பராசரமுனிவர்கூறுகின்றார். அருமறைத்துணிவைக் கல்லாலினிழலின்கண் தக்ஷிணாமூர்த்தமாக எழுந்தருளி உபதேசித்த இறைவனே! என்னால் உலகின்கண் நலமுண்டாகக்கருதி இப்புத்திரனைப்பெற்று மறைகளனந்தமாகக் கிடக்க நான்காக வகுத்தமையால் வியாசனெனப் பெயரிட்டேன் என, விமலையொருபங்குடையவித்தகன்,இவனால் உலகினுக்கென்னநலமென இவன் வேதங்களைத்தொகுத்ததுமன்றி, அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நாற்பயனையுந் தொகுத்துக்கூறுவதாய், இனி நடக்கும் பாரதப்போரைக்குறித்து மகாபாரதமென்னும் இதிகாசத்தையும் செய்து உலகுய்யச்செய்வானென, ஆயின் இனிநடக்கும் பாரதப்போரை முன்னே தான்குறித்துச் சொல்வானென்றமையால் உன்மகனைச்சொல்லச்சொல்லும், நான் என்மைந்தனாகிய கஜானனமூர்த்தியை எழுதச்சொல்லுகின்றேனென்றுகூறினர். பராசரமுனிவரும் வியாசனைநோக்கினர். அவரும் தன்தாதையின் குறிப்புணர்ந்துபாரதத்தைக்கூறத் தொடங்க ஐங்கரக்கடவுளும் மேருவையே ஏடாகக்கொண்டு தன்னொசிந்த கொம்பையே எழுத்தாணியாக எழுதிமுடித்தனர். பின்னர் பாரதநடந்ததற்கும் இவர்கூறியதற்கும் ஒத்திருந்தமையால் ஸ்ரீமகாபாரதமென யாவருங் கூறலா

யினர். பின்னர் சபாதலட்சங் கிரந்தமாக்கி எனக்கும், நாரதருக்கும், சுகருக்கும், தேவலருக்கும், சுமந்தருக்கும் போதித்தனர். பின்னர் நாரதனை தேவருக்கும், சுகனை இயக்கருக்கும், தேவலனைத் தென்புலத்தாருக்கும், என்னை மண்ணுலகோருக்குங் கற்பிக்கக் கட்டளையிட்டு நீசெய்ததவப்பேற்றால் என்னையேஉனக்கும் போதிக்கக் கட்டளையிட்டனர். இதனைவேதத்தோ டொப்பாகக்கூறுவானேனெனின் திருமால்முதலிய தேவர்களே பாரதவீரராகையால் இதனையே வேதத்தோடொப்பாகக் கூறுவதென்றனர். திருமால்முதலிய தேவர்களைப் பாரதவீரர்களாகிய எங்கள் முன்னோரென்றீர்! அதனை நன்கு விளக்கவேண்டுமென விரும்பி கேட்க வைசம்பாயனர் சொல்லுகின்றார்.

முன்னே பிரவஞ்சத்தின் தோற்றங்கூறிப் பின்னர் பாரதவீரர்தோற்றங் கூறின் நன்றாகவிளங்கும், ஆகையால்பிரவஞ்சத்தின் தோற்றங்கூறுகின்றேன். திரேதாயுகத்தில் சூரியமரபின் அரசனாகிய கார்த்தவீரியார்ச்சுனன் என்பவன் சமதக்கினி முனிவனைத் தலையரிந்தான். அதையுணர்ந்த இரேணுகை தன்கணவனைத் தலையரிந்தமைக்கு மனம் வருந்திக் கைகநெறித்துக்கொண்டு மார்பில் இருபத்தொருமுறை யறைந்து கொண்டாள். தந்தை யிறந்தமை கேட்ட பரசுராமன் அன்னாய்! நீ வருந்தாதை; நீ யடைந்ததுன்பத்துக்கு மும்மடங்குதுபரம் அக்கார்த்தவீரியன் மரபினோரடையவும், நின்னையமங்கலமாக நாணிழக்கக்கண்ட நான் அவர் மனைவியரெல்லாம் மங்கலநாணிழக்கவும் செய்விக்கிறேனென்று, தாய்மார்பில் இருபத்தொருமுறை யடித்துக்கொண்டமையால் தானும் சூரிய வமிசத்தரசரை இருபத்தொருமுறை போர்க்கோலங் கொண்டு கொன்று அவர்களுதிரத்தைச் சிமந்தபஞ்சகமென்னும் தடமாக்கி அவ்வுதிரமத்தியில் தன் தாதைக்கு உருமைக்கடனைச் செய்துமுடித்துத்தான் தனக்குப் புரோகிதராயிருந்த காசிப முனிவருக்கு உலகமெல்லாந் தக்ஷிணையாகக் கொடுத்துத் தவஞ்செய்யச் சென்றான். அது காரணமாகவே இவ்வுலகத்துக்குக் காசினியென்று பெயருண்டாயிற்று.

காசிபரோ தாம் பரசுராமர் இடத்தே குருதக்ஷிணையாகப்பெற்ற காசினி முழுவதுங் கைப்பற்றி மனுநெறிதவறாமல் அரசு புரியுங்காலத்தில் சூரியகுல அரசமனைவியரெல்லாமதுணுக்குற்று ஒருவர்க்குவாழ்க்கைத்துணைவியாதற்கு முன் பிறந்தகமும், மனைவியரானபின் புக்க இடமும் கணவனுக்குப்பின் மைந்தரும் காக்கவேண்டுதலான் ஒருவாறேனும்சுதந்தர மின்மையால், நாம் கணவனையும், மக்களையும் பெற்றிலோம்; பிறந்தகமோ வெனின் அங்கும் அவ்வாறாகவே யிருப்பதனால் என் செய்வதென்று வருந்தி நின்று, இனி அக்கினிப்பிரவேச மாதலே நலமென்று அக்கினி வளர்த்தி அதில் விழத் துணிந்து நின்றனர். அவ்வாறுஅம்மாதர் அக்கினிப்பிரவேசமாதலேநலமென்று துணிந்ததை யுணர்ந்த காசிபமுனிவர் மோசம் வந்து விட்டதே! இனி அவர்களைத் தடுப்பதற்கு வகை இதென்று அம்மாதரை நோக்கி; நீங்கள் இவ் வாறு செய்யத் துணிவானேன்! நான்உங்களுக்குச் சொல்வ தொன்றுண்டு.

அது இம்மை, மறுமை, வீடென்னும் மூன்றனையும் தரும். சற்று நில்லுங் கோள் என மறுத்தனர்; அரசமாதர் யாங்களிருந்தென்பயன்! கணவன் என்று இறந்தனனோ! அன்றே நாங்களுமிறக்க வேண்டும். அது தான் தருமமென்றல் துணிபு, எங்கள் கருத்தின் வண்ணம் கட்டளையிட்டால் நலமென்றனர். காசி பரோ உங்களுக்கு வேதத்துள் கூறிய உண்மையை யெடுத்துச் சொல்லுகின் றேன். 'சந்ததிக்கழகு வந்தி செய்யாமை' என்றபடி மாதர்க்கழகாவது புத்திரரைப் பெற்றுத் தங்கள் மரபை விருத்திசெய்வதேயாம்; நீங்களோ புத்திரப் பேறின்றி அக்கினியில் விழத்துணிந்தது ஏன்; அக்கினியில் வீழின் பைசாசபதம் பெற்று வருந்துவீர். ஆதலால் நீங்களெல்லாம் உங்கள் குலகுரு வால் தருமசந்தானம் பெற்று உங்கள் குலத்துக்கு நீர்க்கடனியற்றும் புத்தி ரரையேனும் பெற்றுய்யுங்கோள் என்றனர்.

அது கேட்ட அம்மாதரெல்லாம் இவர் இந்திரன் முதலிய தேவர் கட்கெல்லாம் தந்தையன்றோ? மேலும் கமலாசனனுக்கு மைந்தரன்றோ? இவரும் நமக்குறுதியாயினவற்றை அன்றி வேறுசொல்வாரா என்று துணிந்து, அம்முனிவர் பெருமானை நோக்கி நாங்கள் அனைவரும் உமது வாக்கினை மறைவாக்கென்றே எண்ணித் துணிந்தோம். இங்கு அயல் ஒன்றும் எண்ண மாட்டோம், இனி எங்களுக்கு விடை கொடுமென்று அவரை இரந்து கேட்டுத் தத்தமிருப்பிடஞ்சேர்ந்து அவரவர் தங்கள் குலகுருவை வருவித்து அவரிடத்துக் காசிபமுனிவர் கட்டளையிட்டதை யெடுத்துக்கூறி அவரால் தருமசந்தானம் பெற்றுக்கொண்டனர். ஒவ்வொரு மாதரும் எவ்வெட்டுமைந் தரையும், இவ்விரண்டு குமாரிகளையும் பெற்று அவரால் சந்ததிபெருகிச் சூரிய குல அரசர் மரபுதழைத்தது. இதனை அறிந்த காசிபமுனிவரோ தம்வசத் திருந்த பூவுலகமுற்றும்அவ்வரசிகள்பெற்றமைந்தர்களுக்கே பகிர்ந்துகொடுத்து அரசாளக் கட்டளையிட்டனர். அவர்களோ முனிவன் சொல்லே மறைமொழி யென்று துணிந்து மனுநெறி சிறிதும் வழுவாமல் தம்மாலும், தம்பரிசனத் தாலும், கள்வராலும், பகைவராலும், பிணியாலும் மன்னுயிர்க்கு இடையூறு வராமற் காத்து, படை குடி கூழ் அமைச்சு நட்பு அரண் என்னும் ஆறங்க முடையவராய் யாவரும் தங்கடைத்தலைவந்து இறைப்பொருள் கொடுத்து வணங்க, தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல் தானென்னும் ஐந்தை யும் மன்பதைபால் விடுத்து தானொரு கடமை கொண்டு அறச்செங்கோ லோச்சிவந்தனர்.

இவ்வாறு அறச்செங்கோலோச்சி வருகையினுல் தருமதேவதை நான்கு பாதத்தாலும் நடந்தது.உலகம் பிரசாவிருத்தியடைந்தது. ஆதிசேடன்தன்னு யிரம் பணு முடிகளாற் சுமக்கு நிலமடந்தையோ உலகப் பொறையாற்றுளாய் இனி நானென்செயக்கடவேன்! எனத் திரிமூர்த்திகள் ஒருங்கு கூடியிருக் குஞ் சமையத்தல்லது தன் குறை கேட்பார் இலரென்றுதுணிந்து உபேந் திரன், பிரமாதி தேவர்கள் கூடிய சபையில் வந்து நிலக்கொடி தன்னுயர் நீரவேண்டி நின்றுள். அம்மூவரும் இனி மூவர் காரியமாம் திருத்துருதல்வன்

முதலிய தேவரும், அசுரரும் நிலவுலகத்தின் மாநிடராகத் தோன்றுவர். உன் பாரநீங்கும். இனி வருந்துத லொழியென்று அப்பூமடந்தைக் குரைத்தனர். அப்பூமடந்தையும் தன்பாரமே நீங்கினதுபோற் கழிபேருவகை அடைந்து தன் இருக்கை சேர்ந்தாள். இவ்வாறாக பிரமாதி தேவர்களும் நிலமகளை அனுப்பிய பின்னர் கரியகோலத் திருவுருப்பிரானாகிய மூவர் காரியமுந் திருத்து முதல்வன் ஆதியஞ்சோதியுருவையங்குவைத்திங்குப்பிறந்து தேவர்களும் அசுரரும் மாநிடராகத்தோன்ற,அவருடன் இப்பூபாரத்தையும் நீக்கியருளினானென்று வைசம்பாயனர் கூறவே, அவ்வரலாற்றினை எனக்கு நன்றாக விளக்கவேண்டுமென ஜெனமேஜெய மகாராசன் கேட்க வைசம்பாயனர் கூறத்தொடங்கினர்.

## பிரவஞ்சோற்பத்திச் சருக்கம்.

புண்டரீகக் கட்புயல்போன் மேனிப்பிரானாகிய உலகமுண்ட பெருவாயன் திருநாபிக் கமலத்தின் பொகுட்டில் நான்முகனாகிய பிரமன் உதித்தான். பிரமன் உடலில் அத்திரி, மரீசி, புலத்தியன், கிரன், கிருத்து, புலகன் என்னும் அறுவரும், வலக்காற் பெருவிரலில் அப்பிரன், தக்கன் என்பவரும் தரணியென்னு மாதுந் தோன்றினர். வலக்காற் பெருவிரலில்தோன்றிய தக்கன் இடக்காற் பெருவிரலில்தோன்றிய தரணியென்பவளால் ஆயிரமக்களை யீன்றான். அவர் பிரமசரிய மேற்கொண்டு தபோநிதிகளாய் ஈறி லின்பந்துய்த்தற் கிடமாகிய பரமபத மெய்தினர். இதனையறிந்த தக்கன் பின்னும் தரணியென்பவளால் ஐம்பது மாதரைப் பெற்றான். அவருள் கிரத்தி, இலக்குமி, துருதி, மேதா, புஷ்டி, சிரத்தை, கிரியை, விருத்தி, இலச்சை, மதியென்னும் பதின்மரைத்தருமனென்னு மனுவுக்கு மணஞ்செய்துகொடுத்தபின்;அசுவனி, பரணி, கார்த்திகை, உரோகணி முதலிய இருபத்தேழுமக்களைச் சந்திரனுக்கு மணஞ் செய்வித்தான். அசுவனி முதலிய இருபத்தெழுவரே நக்ஷத்திரபத மெய்தியிருக்கின்றனர். பின்பு அதிதி, திதி, தனு, காலை, ஆயு, சிங்குகை, மநு,சுரபி, முனி, குரோதைவசை, அநுகை, விநுதை யென்னும் பதின்மூவராகிய தக்கன் மக்களைக் காசிபமுனிவன் மணந்தான், இவருள் அதிதிக்குப் பன்னிரு சூரியரும், இந்திரன் முதலிய தேவரும் உதித்தனர். திதிக்கு இரணியன், இரணியாக்கன் என்னும் அசுரரிருவர் பிறந்தனர். அவருள் இரணியனுக்குப் பிரகலாதன் பிறந்தான். பிரலாதனுக்கு விரோசனன், கும்பன், நிருபனென்னு மூவர் பிறந்தனர். விரோசனனுக்கு மூவுலகாண்ட மாபலிதோன்றினான். அவனுக்கு வாணாசுரன் உதித்தான். தனுவென்றவளுக்கு விப்பிரசித்தி, நமுசாசி, சங்கவருணன், பலோமன், விலோமன் முதலிய நாற்பதுமைந்தர் தோன்றினர். அந்நாற்பதின்மரால் சந்ததி விருத்தி யடைந்து அசுரர் பெருக்கமடைந்தனர். காலை யென்பவட்கு விநாசன், குரோதன் முதலிய ஐம்பதின்மர் தோன்றி அபிவிருத்தி செய்தனர். ஆயுவுக்கு வியசன், [illegible], வீரன், விருத்திரன் என்னு நான்குமக்கள் தோன்றிப் பெருகினர்.

சிங்கிகை யென்பவளுக்கு இராகுத் தோன்றினன். மனுவென்பவளுக்கு வீம சேனன், உக்கிரசேனன் முதலிய பதினறுகந்திருவர் உதித்தனர். சுரபி என் பவளுக்கு மேனகைமுதலாகிய அப்ஸரஸமாதரும், தேவ சுரபிகளுந் தோன் றின. முனியென்பவட்கு க்ஷணனென்பவன் பிறந்தான். குரோதவசைச்கு ஹணனென்பவன்உதித்தான். மதுகையென்பவட்குச்சித்தாகள்தோன்றினர். விநுதைக்கு அருணனும், கலுழனும் பிறந்தனர். அருணனுக்குச் சேதியென் பவளிடம் சம்பாதி, சடாயு என்னு மிருவர் பிறந்தனா. கத்துருவுக்கு ஆதி சேஷன், வாசுகி, தக்ஷகன் முதலிய நூற்றுநான்கு நாகராஜரும், சலாக் காரை யென்னு மொருமாதுந் தோன்றினா. இவரே காசிபருடைய சந்ததி யாமென்பர்.

இனி ஆங்கீரசமுனிவர்சந்ததி கூறுகின்றேன். ஆங்கீரசனுக்கு வியாழபக வான் முதலிய மைந்தரும், யோகசித்தியென்னு மாதுந்தோன்றினர். அவருள் வியாழபகவானுகிய பிருகஸ்பதி தேவ குருவாயினன். அத்திரி முனிவனுக்கு பிரமருஷிகள் தோன்றினா. புலத்திப முனிவனுக்கு விச்சிரவசுவும், விச்சிர வசுவுக்கு இயக்கமாதினிடமாக வைச்சிரவணனுகிப குபேரனும, கேசினி யிடமாக இராவணன், கும்பகாணன், விபீஷணன் என்னும மைந்தரும், சூர்ப் பனகை யென்னும் மாதும் தோன்றினா. இவரால அரக்கா வமிசம பெரு கிற்று. மேலும் புலத்தியனுக்குக் கின்னரா, கிமபுருடரும பிறந்தனா. கிருது முனிவனுக்கு என்றுமழியா நிலைமையையுடைய நான்கு முனிவா தோன் றினர். பிரமகுமாரராகிய தேவலருக்குப் பிரசாபதி தோன்றினா. அவருக் குத் தூமிரை, புத்தி, மனஸ்வனி, ரதை, சுசனே, சாண்டிலி, பிரபாசாலே யென்னு மனேவியர் எழுவருண்டு. அவருள் தூமிரையினிடமாக வருணனும், புத்தியினிடமாகத்துருவனும், மனஸ்வனியினிடமாகச் சோமனும், ரதையி னிடமாக நகுஷனும், சுவசனேயினிடமாக அஷவனும், சாண்டிலியினிடமாக அக்கினியும், பிரபசாலேயினிடமாக அனலன், அணிலன், ஆபற்சைவன், சோமன், தரன், துருவன், பிரதித்தியூசன், பிரபாசனன் என்னுமவசுக்களெண் மரும் பிறந்தனர். அவருள் வருணன் என்னும வசுவுக்குத் திரவணனும், துருவனென்னும் வசுவுக்கு காலனும், சோமனென்னும வசுவுக்கு மனேகர மென்னு மங்கையிடமாகப் புரோசனன், வாச்சிகன், சிசிரன், பிராணன், வருணன் என்னு மக்களும் புரதையென்னுமாதும் தோன்றினர். புரதை யென்பவளுக்குக் கந்தருவர்பதினெருவருதித்தனர். நகுஷனென்னும் வசு வுக்குச்சோதி தோன்றினன். அனலனென்னும் வசுவுக்குப் புரோசனனும், அவிக்யாகமதியுந் தோன்றினர். அக்கினியென்னும் வசுவுக்கு மாரன் தோன்றி னன். பிரத்யூஷனென்னும் வசுவுக்கு தேவல முனிவன் பிறந்தான். பிரபா சனவசுவுக்கு வியாழபகவான் உடன்தோன்றிய யோகசித்தியிடமாக விசுவகர் மாவுதித்தான். தரனென்னும் வசுவுக்கு மாதேவன், அரன், உருத்திரன், சங் கரன், நீலலோகிதன், ஈசானன், விஜயன், வீமதேவன், பவோற்பவன், கா பாலி, சௌமியன் என்னும் பதினொரு உருத்திரர் பிறந்தனர். கமலசம்பவ

ளுகிய பிரமன் வலக்கையில்தருமனென்னு மனுத்தோன்றினுன். அவனுக்குச் சமன், இராமன், அருஷன் என்போர் உதித்தனர். அம்மூவரும் முறையே அப்பிராப்தி, நிருதி, நந்தி யென்னுமாதரை மணந்து வாழ்ந்திருந்தனர்.

இனி சவித்து என்பவனுக்குத் துவஷ்டையென்பவளிடமாக அச்சுவினி தேவர் வந்தனர். சகலசராசரங்களையும் விதித்தபிரமதேவன் மாாபில பிருகு னிவன் தோன்றினுன். அவன் சுக்கிராசாரியனை ஈன்றுன். அச்சுக்கிரா சாரியனே அசுரகுருவாயினுன். அவ்வசுர குருவுக்குத் துவட்டிரன், தாத்திரி, பத்திரன், கன்னன் என்னும் நான்கு மக்களுதித்தனர். அவர் அசுரருக்குப புரோகிதராயினா. மேலும் பிருகுமுனிவனுக்குச் சவுனகனுதித்தான். அச் சவுனகனுக்கும் யயாதியென்னு மனுபுத்திரி சுகன்னிக்கும் சகன் இருசிகன் முதலிய நூற்றுவா பிறந்தனர். இருசிகனுக்குச் சமதக்கினி தோன்றினுன். சமதக்கினிக்கு இரேணுகையிடமாக நான்கு மக்கள் தோன்றினர். அவருள் பரசுராமனைப்பற்றி முன்னே சொல்லியிருக்கின்றேனெனப் பின்னும் கூறு கின்றுன். ஜெனமேஜெயமகாராஜனே திருமாமகள் கொழுநன் திருவுந்தியிற் றேன்றிய பிரமதேவன் தாதை,விதாதை,அலக்குமியென்னு மூன்றுமாதரைப் படைத்தான். அவருள் அலக்குமிபல மாதரை யீன்றுள். வருணனென்பவன் ஜேஷ்டை யென்பவளிடமாக தருமனென்னு மோர் மைந்தனையும், சுனநகை யென்னு மோர் மாதையு மீன்றுன. அத்தருமன்நிருதியென்பவளிடமாக மகா பயன், பயன், மிரததீவு என்னும் மூவரையீன்றுன். மீட்டும் அவன் தாகி, சேனை, பாசினி, திரிதராஷ்டிரை, சுகியென்னும ஐந்து மாதரைப் பயந்தான். தாகி காக்கைகளை யீன்றுள். சேனை புறுக்களை யீன்றுள். திருதராஷ்டிரை விச்சுளியை நலகினுள். பாசினி பருந்துகளையும், ஆந்தைகளையும் ஈன்றுள். சுகி கிஞ்சுகம்போன்ற வாயையுடைய சுகங்களையீன்றுள். முன்னேநாம்கூறிய காசிபமுனிவர் மனைவியராகிய முனி, மிருகை, மந்தை, அரிளி, பத்திரமதி, மாத ங்கி, சார்த்தூலி, கலேசை, சுரதை யென்னும் எட்டுமாதரை யீன்றுள். அம் மாதருள் மிருகைவராக முதலிய மிருகங்களைப் பயந்தாள். மந்தை உயிருள் பொருளாகிய பலசரவுயிர்களைநல்கினுள். அரணிகுரக்கினம் பெற்றுள். பத்திர மதி யானைகளைப் பெற்றுள். மாதங்கி அவ்வாறே யானைகளை யீன்றுள். சார்த் தூலி சிங்கம், புலி இவைகளை யீன்றுள். சுவேதை எட்டுத்திக்குக் கரிகளைப் பெற்றுள். சுரதை உரோகணி, பத்திராங்கி, கந்திருவை யென்னும் மூன்று மாதரைப் பெற்றுள். உரோகணிக்கு மான்களுண்டாயின. பத்திராங்கிக்கு மரம்,கொடி, புதர் இவைகள்தோன்றின. கந்திருவை குதிரைகளைப் பெற்றுள். இது பிரவஞ்சோற்பத்தியே யாகும். இனிப்பாரதவீரர் உற்பத்தியைக் கூறு கின்றேன்.

### பாரதவீரர் உற்பவச் சருக்கம்.

மிகச்சிறந்த வரம்பெற்ற யதுகுலசிகாமணியாகிய வசுதேவருக்குத் தேவ கியென்றும், உரோகணி யென்றும் இரண்டுமனைவியருண்டு. அவ்விருமனைவிய ருள்தேவகிக்குக் கண்ணபிரானும், உரோகணிக்கு நம்பி மூத்தபிரானென்னும்

பலராமரும் திருவவதரித்தனர். கண்ணபிரான் அயர்வறு மமரர்களதிபதி யாகிய அறவாழியந்தண னென்னும் திருமாலினமிசமேயாம். நம்பிமூத்தபிரா னாகிய பலபத்திரரோ அனந்தனாகிய ஆதிசேஷ அமிச மெனப்படும். உருப்பிணி, சத்தியபாமை, சாம்பவதி, மித்திரவிந்தை, சத்தியை, பத்திரை, இலக்கணை, காளிந்தி என்னும் எண்மரும் கண்ணபிரான் பட்டமஹிஷிகள். இவர்களே அஷ்ட லட்சுமிகள் அமிசத்தவர். அரமகளிரமிசத்தால் கோவியர் திருவவதரித்தனர். சனற்குமார பகவான் முதலிய மெய்யுணர்வுடைய முனிவர் அமிசத்தால் யாதவர் தோன்றினர். பிரபாசனவசுவாகிய எட்டாவது வசு வமிசத்தால் காங்கேய னென்னும் வீஷ்மன் தோன்றினன். அசுரர் குருவாகிய சுக்கிரபகவான் அமிசத்தால் வில்லாசிரியராகிய துரோணர்தோன்றினர். காமம், குரோத முதலிய அறுபகையின் அமிசத்தால் வில்லாசிரியன் மகனாகிய அசுவத்தாமன் பிறந்தான். சூரியன் அமிசத்தால் அங்கதேசாதிபதியாகிய கர்ணன் தோன்றினன். துவாபரயுகபுருடன் அமிசத்தால் சகுனி பிறந்தான். கந்திருவருக்கு அரசனாகிய அமிசனென்பவன் அமிசத்தால் கண்ணிலாதவனாகிய திருதராஷ்டிரன் உதித்தான். பிரகலாதன் அமிசத்தால் சல்லியன் தோன்றினன். வசுமதியென்னும் தெய்வமாது அமிசத்தால் காந்தாரி தோன்றினள். கலியுகபுருடன் அமிசத்தால் துரியோதனன் உதித்தான். இரணியன் அமிசத்தால் சிசுபாலன் உதித்தான். பிரகலாதன் பின்றோன்றிய அநுகுலாதன் அமிசத்தால் த்ருஷ்டகேது வந்துபிறந்தான். இவன் தம்பிமாராகிய துச்சாதனன், விகாணன் முதலியோர்விச்சிரவாகு வழியேவந்த அசுரர் அமிசத்தால் தோன்றினர். சிபி அமிசத்தால் சுருதசேனன் உதித்தான். பாஸ்கலன் அமிசத்தால் பகதத்தனும, விப்பிரசித்தென்னும் அரக்கன் அமிசத்தால் ஜராசந்தனும், தயசீரன் அமிசத்தால் நசுவசீரனும், சங்கனி, ககனமூர்த்தி, வேகவந்தன் முதலானோ அமிசத்தால் கேகயராஜரும், சுவர்ப்பானு அமிசத்தால் உக்கிரசேனனும், கங்கமன் அமிசத்தால் சோமகனும், அஸ்வனி யமிசத்தால் கிருதவன்மாவும், உருஷபாவன் அமிசத்தால் தீர்க்கப்பிரக்யனும், நஜரன் அமிசத்தால் மல்லனும், குக்குமன் அமிசத்தால் பிருகத்ருதுவும், துரு அமிசத்தால் சேனாபிந்துவும், விருபாக்ஷன் அமிசத்தால் சித்திரவன்மாவும், சகரன் அமிசத்தால் பாதிவிந்தியனும், பவுத்திரன் அமிசத்தால், கிருபனும், அசாங்கன் அமிசத்தால் பாக்லீகனும்,சந்திரவக்கிரன் அமிசத்தால் பூரிசிராவும், நிகும்பன் அமிசத்தால் உருஷிகனும், மயூரன் அமிசத்தால் குரோத கீர்த்தியும் பிறந்தனர்.

அக்குரோதகீர்த்தியோ நந்தகன், கண்டகன்,வேஷன்,சித்தராத்தஷேன், வீரியபாகு,மஹாவீரியன், குதரன், சித்திராதன், நீலன், வீராதாமன், தந்தசக்த்ரன், துரஜெயன், ஜெனமேஜயன், ஏகவல்யன் என்னும் பல அரசரைப் பயந்தான். பக்தாஸ்தன், அமிசத்தால் நந்தகனும், தீர்க்கசிவகன் அமிசத்தால் காசிராசனும், விசயன் அமிசத்தால் பசு மித்திரனும், சித்து எக்யவன் அமிசத்தால் பாகராஷ்டிரனும், வீரன் அமிசத்தால் பவுண்ட்ரமச்சனும், உருதிரன் அமிசத்தால் மணிமத்...

னும், பராசிதனும், நாதிசந்து, நாதிகனும், மகோதனும், மத்தியனும், புரததனும், என்னும் எண்மர் தோன்றினர். குரோதவசை மைந்தனாகிய கணன் அமிசத்தால் கஜபுத்திரனும், அலி யென்னும் அரக்கன் அமிசத்தால் சிகண்டியும், வியாழபகவான் அமிசத்தால் புருஹகீர்த்தியும், மருத்துவர் அமிசத்தால் சாத்தகியாள்வான், பாஞ்சால விராடரும், திரிகுணன் அமிசத்தால் விதுராழ்வானும், இயக்கர்கோன் அமிசத்தால் பாண்டு ராசனும், சித்தி, புத்தி யென்னும் தேவதைகள் அமிசத்தால் குந்தி மாத்திரை யிருவரும், இயமனால் தருமனும், வாயுவால் வீமசேனனும், இந்திரனால் அர்ச்சுனனும், அச்சுவினி தேவரால் நகுல சகதேவராகிய இரட்டையரும், விசயலட்சுமி யமிசத்தால் திருஷ்டத்துய்மனும் தோன்றினர். இதுவே பாரதவீரருற்பத்தியாம். இவர்கள் உலகிற்றோன்றிப் பெருக்கமடைந்து பின்னே போர்க்கோலங் கொண்டு பாரதயுத்தம் செய்து நிலப்பொறை தவிரவே தாம் தாம் தத்தமிருக்கையிற் சென்றனர்; இப்பாரத வீரருற்பத்தியைக் கேட்டால் பேருவகை தோன்றும் என்பதிற் சந்தேகமேயில்லை என்று வைசம்பாயனர் கூறக்கேட்டுச் சந்திரவமிசத்தில் தோன்றியஜெனமேஜயமகாராஜன் கேட்டுமிகக்களிப்பெய்தி யான் பாரத வீரருற்பத்தியைத் தேவரீர் கூறக்கேட்டு மகிழ்ந்தேன், ஆயினும் அந்தணர், அரசர், வசியர், சூத்திரர் என்னும் நாற்குலமுந் தோன்றிய வரலாற்று முறைமையை நன்குவிளக்க வேண்டுமென்றனன். அதற்கு வைசம்பாயனர் தக்கனென முன்னேயே கூறியிருக்கின்றோமன்றோ, அத்தக்கன் திருமறுமார்பனாகிய ஆதிபகவனது உந்தியின்கண் தோன்றிய நான்முகக் கடவுள் வலக்காற்பெருவிரலில் வந்தோன். அவன் ஐம்பதின்மராகிய மகளிரை யீன்றான். அவருள் காசிபமுனிவனுக்கு அதிதி யென்பவள் வயிற்றில் பரிதியங்கடவுள் தோன்றினன். அவன் சாயாதேவியைமணந்து வைவசுதமனு, தென்புலத்தார் கோமானாகிய இயமன், சனி, தமதி, யமுனையென்னும் ஐவரைப் பெற்றான். இனியான் வரலாற்றுமுறையாக உன்மரபினை முற்றுமொழியாமல் விளங்கக்கூறுகின்றேனென்று பின்வருமாறு கூறுகின்றார்.

---

# யயாதி மகாராஜன் சருக்கம்.

கலிநிலைத்துறை.

இணையி லாதவ னிறப்பொடு பிறப்பெனுங் கடற்கோர்
புணையு மானவன் புனிதர்கண் மனத்துறை புனிதன்
பணைகொ டிண்புயப் பாண்டவர்க் கிகத்தினும் பரத்துந்
துணைய தானவன் றுணைப்பத நமக்கினித் துணையே.

நெடிய ஆகாயத்தில் என்றும் அசுவனிமுதலிய நாட்களைவிழைகின்ற வனும், அருமையாகிய அமுதத்தைத் தேவர்கட்குத்தருபவனும் வட்டவடி வையுடையநாகங்களின் பேருயிர்ப்பினால் மயங்கி மண்ணுலகம் கலப்பையினால் வருந்திய துயரநீங்கத் தன்மண்டலநிழலினால் அதனுடம்பு குளிரச்செய்தவ னும், மந்தரகிரியைமத்தாக வாசுகியாகிய வடம்பிணித்துக்கடையவே தான் தறியாயிருந்ததுமல்லாமல், அவ்விடந்தணிய அக்கடலிற் றோன்றினவனும் ஈரொண் பதினாறுகலையுடையவனும், அவைகளைத்தேவர்க்குதவி மீளக் கவர்பவ னும், அத்திரிமுனிவனிடத்தும், அக்கினிமுகத்திலும் பிறந்தவனுமாகிய சந்தி ரன் புதனைப்பெற்றான், புதன் புரூரவனைப்பெற்றான். அப்புரூரவன்நான்மறை ஆறங்கம், பதினெண் ஸ்மிருதிகள், முதலியன பழுதறக்கற்றுப் பொதுக்கடிந்து உலகமுழுதும் தன்வெண்கொற்றக்குடைநிழலில் இருக்க அரசுசெய்துவந்தமை யால் சக்கரவர்த்தியென்னும் பெயர்பெற்றான். இவ்வாறுஅரசாண்டுவருநாளில் ஒருநாள் இந்திரனுக்கருகிலிருக்கும் அரமகளிருளொருத்தியாயும், திருமரு மார்பன் உந்தியிற்றோன்றிய நான்முகக்கடவுள் அருமையாகத் தன்தொடை யிற் பயந்தவளுமாகிய ஊர்வசியென்பவள் மலர்கொய்துவிளையாடப் பூம்பொ ழிலிற்சென்றாள். அம்மாதினை அரக்கர் மறித்துத்தடுத்துஅவள் இன்னலங்கவர வெண்ணி அவளைத் தேரிலேற்றிக்கொண்டு சென்றனர். இவ்வாறு அக்கொடி யோர் அவளைக்கைக்கொடுசென்றபோது அவள் பூனைவாய்ப்பட்ட கிளிபோற் பொருமிவிம்மி என்னைக்காப்பாரிலரோ எனக்கதறி யோலிட்டழுதாள். அவ் வொலிகேட்டு இந்திரன் முதலிய அமரர்யாவரும் அவ்வரக்கர் பேராற்றலுக் கஞ்சினவர்களாயிருந்தனர். அதனைப் புரவலர்பெருமானாகிய புரூரவன்கண்டு அழலிடைப்பட்ட மெழுகுபோல் உருகி தன்சாரதியைக் கூவியழைத்துத் தெய்வப்புரவியைப்பூட்டித் தன்தேரைக்கொணரக்கட்டளையிட்டுத் தானேறி விரைந்துசென்றுஅவ்வசுரரைத்தடுத்து வில்லைவளைத்துச் சரமழைசொரிந்து அவர்களைக்கொன்று வெற்றிகொண்டு அப்பெண்மணியை மீட்டுத் தன்தேரி லேற்றிக்கொண்டு தன்தேரைசெலுத்தி அவள்மீது மையல்மிஞ்சி அவளை இந் திரன் கொலுவீற்றிருக்குஞ் சுதர்மமென்னுஞ் சபையிற்கொணர்ந்து வணங்கி ஒருவசனம் கூறுகின்றான். திரிவிதவுலகத்துக்குமரசே! தேவர்களணையுப் பரிசே! மீனகேதனனாகிய அனங்கன்கரும்பாகியவில்லைவளைத்துவண்டுகளாகிய நாண்பூட்டி மலரம்புதொடுத்து வருத்துகின்றான், கிளியைவாகனமாகவுடைய

அவ்னுக்கோ மாதர்படைநெருங்கின. தென்றலோ தேராயிருக்கின்றது. அலை கடலாகிய பேரிகையதிர்கின்றது. இரவாகிய யானையோ பிளிறுகின்றது. மதிக் குடைகவித்து நிற்கின்றான். இத்தனைக் கோலாகலத்துடன்நிற்கின்ற மாரனோ போர்அரக்கரைவென்ற என்வல்லமையும் எண்ணான். என்னை அழலிடைப் பட்டமெழுகேபோல இப்பெண்கொடியைநாடி அவள்இன்பநலமனுபவிக்கவரு த்துகின்றனன், என்செயக்கடவேன்! உமதுபொருளை உம்பால்சேர்த்தேன் என்றுஎட்டுறுப்பும் நிலமுறப்பணிந்துநின்றான். அதுகண்டு கற்பகநிழலில் அரசு புரியும்இந்திரனே, பாவலர்பெருமா னெனப்படும் புரூரவனே! அரக்கர்கைப் படாமுன்னம் இப்பெண்கொடியா என்பொருளாயிருந்தனள். அவர்கள்கைப் பட்டவுடன் அவர்பொருளாயினள். புவிப்பொறை பொறுத்தபுரவலனே! நீசெ ன்று அவ்வரக்கரைப்பொருதுவென்று கொணர்ந்தமையால் இவள்உன்பொரு ளேயாம். அதற்கோரையம் எள்ளளவுமின்றே! ஆதலால், இப்பெண்மணியைக் கைக்கொண்டு இவளொடும் அன்றில்விழைபோக மயர்ந்திருவென்று கட்டளை யிட்டு ஊர்வசியைநோக்கிக் கூறுகின்றான். மானைவென்றகண்ணாய்! இவ்வரசர் பெருமானுடன் நானிலமடைந்து அன்றில்விழைபோகமயர்ந்து ஒருமகனை ஈன்று மீண்டும் இச்சுதர்மமென்னுஞ் சபையை யடைவாயென்றனன். அம் மொழியைக்கேட்டு ஊர்வசியும் புரூரவனோடு நானிலமணைந்து மலரும் மண மும்போலும், மாரனும் இரதியும்போலும் அன்றில்விழைபோகமயர்ந்து ஆயு வென்னும் மைந்தனை யீன்றுதான் இந்திரலோகமேபோய்ச் சேர்ந்தாள். அவ் வாயுஎன்னும் அரசர்பெருமான் தந்தையினும் எண்மடங்கு அதிகமாய் அற வொழுக்கங் குறைவின்றிச்செய்து தன்னுயிர்போல மன்னுயிர் காத்துவந் தான்.

அவ்வாயுவுக்கு நகுஷன்தோன்றினான். அந்நகுஷனே முடிபுனைந்து மனு நெறிவழியொழுகி அசுவமேதங்கள் ஒருநூறும்செய்து இந்திரபதம் பெற்றுப் புலோமிசைமேற் காதல்கொண்டு அவளை அழைத்துவரத்தேவர்களிற் சிலரை யனுப்பினான். அதையறிந்த புலோமிசை வியாழபகவானிடஞ் சென்று முறையிட்டாள், அதற்குவியாழ பகவான் பூங்குயில்போன்ற புலோமிசையே! நீபுலம்பவேண்டாம்; இந்திர னெவ்வாறு வருவானோ அவ்வாறே இந்நகுஷனை யிடபுதிய இந்திரனும் வருவானேல் தடையொன்றுமின்றென்றுகூறு; அவ னோ எழுமுனிவர்கள்சுமக்கும் மணிச்சிவிகையூர்ந்துவருவான். அவனிடையே யாமேதனுமொருமொழிகூறுவான்; 'குணமென்னுங்குன்றேறி நின்றார்வெகுளி- ணமேயுங்காத்தலரிது' என்றதேவர் மொழிக்கிசைய அம்முனிவர்கள்பொருது டினசாபமொழிகூறுவர்; அதற்கு அவனிலக்காகுவான், போவென்றனன். புலோமிசையும் தேவகுருவின்சூழ்ச்சியையுள்ளத்தடைத்துத் தேவதூதனை நோக்கி, இப்போது அரசாக்வந்திருக்கும் இந்திரனைக்கண்டு முன் இந்திரன் எவ் வாறுவருவானோஅவ்வாறே வரச்சொன்மின்என்றாள், அவ்வாறே அத்தூதர் சென்று விரைந்து இந்திரனுக்கு இம்மொழியெடுத்துப்புகன்றனர். அதுகேட்டு இந்திர பதமடைந்த நகுஷனே, அத்திரி, ஆங்கீரசன், அகத்தியன், கவுதமன், காசிபன், புலத்தியன், வசிட்டனென்னும்பெயருள்ள ஏழுமுனிவரையும் வரு

ழித்து அவர்களைச்சிவிகையைக் கொணரக்கட்டளையிட்டு, அவர்கள் தாங்கத் தானூர்ந்துசென்றான். அவ்வாறுசெல்கையில் கெடுமதிகண்ணுக்குத்தோற் றாமல் விரைந்து என்னும்பொருள்தரும் 'சர்ப்ப' என்னும்வடமொழியால் அவர்களைக்கோபித்துக் கூறினன். இம்மொழியைப்பொறாது அகத்தியமுனி வன் எம்மைச்சிறிதுமதிப்பின்றிச் 'சர்ப்ப' என்றுகருதிக்கூறினமையால் மாசு ணமாகெனக்கடுஞ்சாப மிட்டான். அப்புதியவிந்திரனே அச்சாபமேற்று நடு நடுங்கி,என்னநினைந்து என்செய்து விட்டோமென்றுபொருமி அம்முனிவன்தா ளில் அடியற்றபனைபோல்வீழ்ந்து வணங்கி என்றைக்கிச்சாப மொழியுமோ வென வேண்டிநின்றான். அதற்கு அகத்தியமுனிவன் மனமுருகிநின்று ஒ வேந்தனே! உன்மரபில் பஞ்சபாண்டவர் தோன்றுவர், அவர் ஒருகாரணத்தால் வனவாசமாகவருவர். அவருள்வீமனை விழுங்குவை! அப்போது இந்நாளிட்ட இப் பெரும்பாம்புருவமாகும் கொடுஞ் சாபம் ஒழியுமென்றுகூறிப்போயினன், இதுகிடக்க,

இந்நகுஷன் நிலவுலகிலிருக்கையில் இவனுக்குயயாதி, சம்யாதி, பிரயாதி என மூவர்தோன்றினர். அம்மூவருள் யயாதிமுடிபுனைந்து ஒன்றும் பரமபொ ருளை மனத்தினிறுத்தி இம்மை, மறுமை இரண்டையுமுணர்ந்து, இராசதம், தாமதம், சாத்துவிதமென்னு முக்குணங்களிற்சாத்துவிதகுணமேய்ந்து;அறம், பொருள், இன்பம், வீடெனநூற்கள்துணிந்தநாற்பொருளுணர்ந்து மந்திரிமார், புரோகிதர், சேனைத்தலைவர், ஒற்றர், சாரணரென்னும் ஐந்தினையு மெய்தி, படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் ஆகிய ஆறங்கமுற்று; நாவல், இறல்; குசை, கிரவுஞ்சம், புட்கரம், தெங்கு, கமுகுஎன்னும் எழு தீவையும் தன்னாணையினடக்கி ; அரசு, மக்கள், சுற்றம், பொன், மணி, நெல், ஊர்தி, அடிமை என்னும் எண்வகைச் சம்பத்தினையும்பெற்று, கீழ்விதேகம், மேல்வி தேகம்,தென்விதேகம், வடவிதேகம், வடரேபதம், தென்னிரேபதம்,தென்பா தம்,வடபரதம், மத்திமகண்டம் என்னும் ஒன்பதுகண்டங்கட்கு மண்டலாதி பதியாய் செங்கோல், மலை,ஆறு, நாடு, ஊர், மாலை, புரவி, யானை, முரசு, கொடி என்னும்தசாங்கம் அடைந்து ; கங்கை, காளிந்தி, சரச்சுவதி, நரு மதை, பொன்னி, குமரி, கோதாவிரி, சிந்து,பொருநை, துங்கபத்திரை, கிருஷ் ணையென்னும் பதினொருநதிகளிலும் பலதானங்களும் வழங்கும் சத்திரம் அமைத்து ; தருமதேவதையை நான்குபாதங்களாலும் நடக்கச்செய்து தன் னுயிர்போல மன்னுயிரையும் காத்துவந்தான். இவனை என்குரு சிகாமணி யாகிய வியாசபகவானே புகழ்ந்தனனெனின் இவன்புகழினை என்னொரு நாவாலெடுத்துச்சொல்லும் தன்மையாமோ! அத்தனைச்சிறந்தயயாதிமகாரா சன் அசுரகுருவாகிய சுக்கிராசிரியன் மகளாகிய தெய்வயானையென்னும்பெண் கொடியைமணந்து இரண்டுமைந்தரையும், அசுரர்குலத்தரசனாகியவிடபன்மா வென்பவன்மகள் சன்மிட்டையென்பவளைமணந்து மூன்றுமைந்தரையும்பெற் றானென்றுகூறவே, ஜெனமேஜெயமகாராஜன் வைசம்பாயனரைநோக்கிக்கூறு கின்றான்,உலகின்கண் அந்தணர்,அரசர்,வணிகர்,சூத்திரரெனக் குலங்கள் நான் காம்,அவருள் அந்தணர்முதலியமூவரையும்இருபிறப்பாளரென்ப.அந்தணர்தங்

சூலக்கன்னிகையையும், தனக்கிழிந்த மற்றைமுக்குலமாதரையும் மணஞ்செய்யவும், அரசர்தம்மரபினோடு ஏனையிருகுலமாதரையும், வணிகர் தம்மரபினோடு சூத்திரமாதையும், சூத்திரர்தங்குலமாதரைமாத்திரமே மணஞ்செய்யவும் அறநூல்விதித்திருக்கின்றது. யயாதியை அறநூல்வழுவாமல்நடந்தோனெனவும், அருட்பெருங்கடலாகிய வியாசபகவானே மிகப்புகழ்ந்திருக்கின்றனரெனவுங்கூறினீர், அவன் அந்தணர்குலத்தரசராகிய சுக்கிர பகவான் மகளை எவ்வாறுமணம்புரிந்தான்? அசுரகுலப்பெருமானென்னும்விடபன்மாமகளாகிய சன்மிட்டையிடமாக எவ்வாறு மூன்றுமக்களைப் பெற்றான்? இதனை விளங்க முறைமையாக உரைக்கவேண்டுமென் றிரந்துகேட்க வைசம்பாயனர் கூறுகின்றார்.

முற்காலத்தில் விடபன்மாஎன்னும் அரக்கனொருவன் பேராற்றலையுடையானாகி நிலவுலகாண்டு விண்ணுலகையும் காக்கவெண்ணி இந்திரனொடுபோர்செய்துவெல்லச்சென்றான். இந்திரனும் தன்பரிவாரங்களோடும் அவனையெதிர்த்து, அவ்விடபன்மாவையொழிய அவன்சேனைமுற்றும் தன் கையிலுள்ள தெய்வப்படைகளால் சிதைத்து அவர்கள்வந்தவழி மீளாமலிருக்கப் போர்செய்துவென்றான். அதனையுணர்ந்த விடபன்மாதன்குலகுருவாகிய வெள்ளியையடைந்து தன்வரலாற்றை முற்றும் ஒழியாமற் சொல்லி, தம்மையொத்தபெரியோரையான்பெற்றிருந்தும்அவலமாயினேனே! இதுஎனக்குவந்தமானக்கேடேயன்று, எவ்வாறேனும் எனக்குத்துணைசெய்யவேண்டுமென் றிரந்து கேட்டனன். அதற்குச்சுக்கிரபகவானும் அவனைநோக்கி, நான் என்ன படைத்துணைக்குவலியனோ, நின்கருத்திற்கிசைய படைத்தொழின் மேற்கொண்டேனாகல் எனக்குக்குருவென்னும் பட்டமெங்ஙனம்? ஆயினும்என்னைவேண்டியடைந்தமையால்முன்படைபொருது இறந்தசேனையையும்,இனிஇறக்குஞ்சேனையையும் எழுப்பவலலேன், இச்செயலொன்றேயான் செய்தற்கிசையும் என்று கூறினன். அதுகேட்டவிடபன்மா இவ்வொன்றேபோதும்,இத்தனையுதவிசெய்யின் யான்போர்செய்து இந்திரனைவென்றேனாவேன் என்றுசொல்லச் சுக்கிரபகவானும் தான்கூறியவண்ணம் இறந்த அசுரசேனைகளை யொன்றொழியாமல் மிருதசஞ்சீவிமந்திரவலியால் எழுப்பிவிட்டார். அவரும் நித்திரை தெளிந்தாரைப்போன்றெழுந்து இந்திரனதுபரிவாரமுழுதும் புறங்கொண்டோட எதிர்த்துப் போர்செய்துவென்றுவாகைசூடினர். இந்திரன்இதனையுணர்ந்த சுக்கிரன் துணைவலியாலன்றோ இவ்விடபன்மா வெற்றிகொண்டான். இதனாலன்றோ 'தம்மிற்பெரியார் தமராவொழுகுதல்-வன்மையுளெல்லாந்தலை.' என்றுங்கூறியிருக்கின்றனர் என்றுதுணிந்து தன்னாசிரியனாகிய வியாழபகவானை வணங்கி என்பகையாகிய விடபன்மாதன்னாசிரியனாகிய சுக்கிரனது மந்திரவலியால் வெற்றிபெற்றான், உமையொருபாகத் தொருவனையொத்த தேவரீர் எனக்குக்குருவாயிருந்தும் நான்பகைவனாலலைப்புண்டேனெனின் எனக்குண்டாகியதாழ்வு யாருடையதாம் என்றான். அதுகேட்டு வியாழபகவானும் சுக்கிரனைவடிவேறு திரிசூலத்தொரு'பரம்பரனைநாடித் தவஞ்செய்து சஞ்சீவி மந்திரம்பெற்றான். அம்மந்திரவலியால் இறந்தாரையெல்லாம் எழுப்பிவிடுகின்றான். அம்

மந்திரம் சுக்கிரபகவானொருவனையன்றி விண், மண், பாதலமென்னும் இப் மூவுலகினும் ஒருவருமறியார், யான் என்செய்வேன், எனக்குப் போர்செய்ய மாற்றலுண்டோவென்றான். இந்திரன் சுக்கிரனையடைந்து அவன்பெற்றிருக்கும் மந்திரத்தைக் கிரகிக்கவல்லார். இவ்விண்ணுலகில யாருமிலரோ வென அங்கிருந்தவருள் வியாழபகவான்மைந்தன்கசனென்பவன் இந்திரனை நோக்கி நீவருந்தவேண்டாம், அச்சுக்கிரனையடைந்து குற்றேவல்செய்து அப்பெரியோனுக் கின்னருள் வரநடந்து அம்மந்திரம்பெற்றுவருகின்றேன் என்றுஉறுதிமொழிசொல்லி சுக்கிரனையடைந்து வணங்கி, உமக்குக் குற்றேவல்செய்கின்றேனாவேன். என்பால என்று அன்புடையராவிரோ அன்று நீர் அருந்தவஞ்செய்து காலந்தொடு கற்பனைகடந்த கருவூலத்துப் பழம்பாடற்கலைமாய செல்வர் தேடிவைத்தகடவுட் பிரானாகிய பரமசிவன்பாற்பெற்ற சஞ்சீவிமந்திரத்தை அடியேனுக்கருள்செய்யவேண்டுமென்றான்.

சுக்கிரபகவான் கேட்டுவருத்தமுற்று நாமோ எழுதாச்சொன்மழலைதுபபுபசுங்குதலைக் கோமளவல்லி யிடப்பாகத்து அருமருந்தைநோக்கிஅருந்தவஞ்செய்துபெற்றோம். அம்மந்திரவலியாலன்றோ நம்பாலசுரர் அன்புடையவராயிருக்கின்றனர். அம்மந்திரத்தைச்சொன்னோமாயின் நமக்குப்பலியாது. அம்மந்திரத்தைச்சொல்லாதிருந்தாலும்எப்போதாயினுங்குற்றேவல்செய்யவந்தானுக்கருள்செய்யவேண்டுமென்பதுவரும், இவனைக்குற்றேவல்செய்பவனாகக் கொள்ளாமலிருப்பதும் அறநூலுக்குவிருத்தம்; இனியென்செய்வதென்று தன் மனத்திலாராய்ந்து ஒருவாறு துணிந்து நீயோ சுரகுருமகனா, நீயே குற்றேவல் செய்பவனாகவந்தால் ஒப்பவேண்டியதே! நீயன்று எனக்குமகிழ்ச்சியுண்டாக நடக்கின்றனையோ அன்று அம்மந்திரமுபதேசிக்கின்றேனா, சிறிதுமஞ்சாமலிருவென்று உறுதிமொழி சொன்னான். அதுமுதலகஜன் சுக்கிரபகவானுக்குக் குற்றேவல்செய்து வருவானாயினான். அவ்வாறு செய்துவருவதுமன்றி அச்சுக்கிரபகவான்மகளாகிய தெய்வயானையோடும வேதபாராயணஞ் செய்துவந்தான். அவளோ இப்படிசெய்துவருவதனாலும், போழகுடையனாதலாலும் இவன்மீது காதலுடையவளாயிருந்தாள். இவ்வாறு சிலநாள்கழிந்தபின்னர், சுக்கிரபகவானிடத்துக் கஜனென்பவன் குற்றேவல் செய்பவனாய் இருப்பதைக்கேள்விப்பட்டு விடபன்மா என்னும் அரக்கருக்கரசன் தன்தூதுவரையழைத்து 'நமது ஆசிரியனாகிய சுக்கிரபகவான் கற்றிருக்கும் சஞ்சீவி மந்திரத்தைக் கற்றுக்கொள்ள வந்திருக்கும் கஜனென்பவனை நமது ஆசிரியனாகிய சுக்கிரபகவான் அறியாதவகைசென்று கொன்றுவிடுங்களென்று கட்டளையிட்டான். அவ்வாறே அவர்கள் அவன்சொன்மேற்கொண்டு பதிவிருந்து ஒருநாள்தருப்பை, சமித்துமுதலியவற்றைக்கொய்யச்சென்றதுகண்டு அவனைச்சூழ்ந்துசென்று அவன்கழுத்தையரிந்து சென்றனர். பின்புமுறைப்படி கஜனென்பவன் வெகுநேரமாயும் வாராமையால் மிக்கவருத்தமுற்று தெய்வயானை தன்தந்தையை வணங்கித்தங்கட்குப் பணிவிடைசெய்யுங்காலந் தவிர மற்றைக்காலமெல்லாம் என்னுடன் வேதபாராயணஞ் செய்துவருவான். அவனை இன்று இத்தனைப்போதாயுங்காணேன்; அவனை எங்கனும்

னீர் ; அவனை வருவிக்கவேண்டுமென்று பணிமொழியுடன் வேண்டவே,
க்கிரபகவான் தன்ஞானதிருஷ்டியால் அவன் இறந்து இருப்பதனை யறிந்து
ஞ்சீவிமந்திரத்தை யுச்சரித்து இறந்திருந்த கஜனையெழுந்துவரும்படி செய்
ான். உடனேநித்திரைதெளிந் தெழுந்தவன்போல் விரைவிலெழுந்து நடந்து
ந்து தன் ஆசிரியனாகிய சுக்கிரபகவானைவந்து வணங்கிநின்று பின்பு அவன்
ட்டளைப்படி தெய்வயானையிருக்கும் இடத்திற்சென்றான். தெய்வயானையோ
ஜனை நோக்கி வியாழபகவான் மைந்தனே! இன்று எங்குசென்றிருந்தனை ;
த்தனைநேரமாயும் வராதிருந்தகாரணமென்ன? என்றுகேட்டபோது நான்
ாட்டிற்சென்று தருப்பைசமித்துமுதலியவற்றைக் கொய்தபின்னர் பெருந்
யில்கொண்டேன், அதுதான்தடையாயிற்று என்றுவிண்டான் ; பின்பு அக்
ன்னிகை வேதபாராயணம் முறைப்படி செய்துவந்தாள்.

இதுநிற்க ; இவ்வாறுசிலகாலம்நடந்துவர விடபன்மாகஜனென்பவன்உயிர்
ந்திருப்பதுகேட்டு முன்போல சில அசுரரை யழைத்து முன்னேதூதுவரால்
கொல்லப்பட்ட அக்கஜனென்பவன் நமது ஆசிரியனாகியசுக்கிரபகவானால்பிழை
த்து உயிருடனிருக்கிறான். நீங்கள்இப்போதும்நமதுகுருவறியாமற்சென்றுஅவ
னைக்கொன்று மதுவுடன்சேர்த்து அம்மதுக்குடத்தைச் சுக்கிரபகவானுக்கு
உண்பித்துவாருங்கோளென, அவர்களும் அவ்வாறேசெய்துப்போயினர். முன்
பின்எண்ணாமல் வாங்கி அம்மதுக்குடத்தை வழக்கப்படி மடமடவென்று
சுக்கிரபகவான் குடித்துப்பெருங் களிப்படைந்திருந்தான். முன்போலக் கஜன்
வராமையால் தன்தந்தையிடத்தில் வந்துவணங்கி அவனையெங்கனுப்பினீர்,
விரைவில்தருவிக்கவேண்டுமென்றாள். "வஞ்சமுங்களவும் பொய்யுமயக்குமார
பில் கோட்டும், தஞ்சமென்றாரை நீக்குந் தன்மையுங் களிப்புந்தாக்கும், கஞ்ச
மெல்லணங்குந் தீருங்கள்ளினை லருந்தினாரை, நஞ்சமுங்கொல்வதல்லா னரகி
னைநல்காதன்றே." என்றபடி சுக்கிரபகவான் கள்ளுண்டு களித்திருந்தமையால்
ஒன்றுந்தோன்றாது இத்தனைநேரமாயுங்கஜனெங்கேபோனானென்ற தன்மகளை
நோக்கி, அம்மா! கஜனைப்பலமுறைகேட்பானேன்? போனவன்வருகின்றான்.
போவென்று கடூரமாகச்சொன்னான். அதைக்கேட்டுச்சற்று மனங் குழம்பி
ான்றுஞ்சொல்லாதவார்த்தையை இன்றுநமதுபிதாசொல்லக்கேட்டோமென்
று துணிந்து தன்பிதாவைநோக்கி இன்றுசொன்னசொல் மிகப்புதுமையாயிருக்
கின்றது; தேவரீரோதிரிமூர்த்திகளோடொன்றாகவைத்தெண்ணத்தக்கதகுதி
யுடையவர் ; நீர்இவ்வாறுகூறுவதுதகுதியல்ல ; உலகினுள்ள எப்பொருளினும்
மன்னுயிர்சிறந்தது, அதனினுஞ்சிறந்ததுநட்பு. இதனாலன்றோ திருவள்ளுவ
ாயனாரும் "செயற்கரியயாவுளநட்பினதுபோல்,வினைக்கரியயாவுளநட்பு." என்
றுஞ் சொல்லியிருக்கின்றனர். அப்படிப்பட்டநட்பினும் பாலியத்தில் பழகிய
ட்புமிகச்சிறந்தது; எனக்குஅவன்அதிபாலியசிநேகனாகையால்நான்தங்களைக்
கேட்டேனென்றாள். அதுகேட்டுச் சுக்கிரபகவான் கஜன் எங்குச்சென்றா
னென்று ஞானதிருஷ்டியால் நோக்கவே,விண்மண் பாதலமென்னுமூன்று உல
ங்களினும் தோன்றாமல் பின்புதன்சரீரத்தினைநோக்கினான். அங்கே கஜன்
டிருப்பதுநோக்கிக் கள்ளுண்டிருந்தகளிப்பால் தனக்கேகேடுவருவதை

நினையாமல் சஞ்சீவிமந்திரத்தையுச்சரித்தான். உச்சரிக்கவேகஜன் உயிர்பெற்றெழுந்தான். இதற்குள்சுக்கிரபகவானுக்குக் கள்வெறியுநீங்கிற்று. அக்கள் வெறி நீங்கவே, தன்வயிற்றில்கஜனிருப்பதுகண்டு அடாமோசம் நேர்ந்ததே! நமது சீடனாகிய விடபன்மாதான் ஒன்றுநினைக்கப்போய் மற்றொன்றுசெய்துவிட்டானே! இதற்கென்செய்வது; அதுதனக்கேகெடுதியானது மல்லாமல் நமக்குங் கெடுதியாக்கிவிட்டதே என்று எண்ணி, கஜனைப்பார்த்து அப்பா! நான்சஞ்சீவி மந்திரத்தைக்கற்பிக்கின்றேன்! எனக்கோருபகாரஞ்செய்யவேண்டும், அது நீயோ என்வயிற்றைக் கிழித்துக்கொண்டுவந்துபிறகு என்னையெழுப்பிவிட வேண்டுமென்பதேயென்றான்.

கஜனும் அவ்வாறே யொத்துக்கொண்டு அச்சஞ்சீவிமந்திரத்தைக்கற்றுக் கொண்டு அச்சுக்கிரபகவான் உடம்பைப் பிளந்துகொண்டுபுறப்பட்டுப்பின்பு அச்சுக்கிரபகவானையெழுப்பித் தெய்வயானையிருக்குமிடஞ்சென்றான். தெய்வயானையோ கஜனைநோக்கி எங்குப்போயிருந்தனை! என்றுகேட்க ஒரு போக்காகச் சொல்லிவிட்டுத் தான் தன்னாசிரியனுக்குக் குற்றேவல்செய்துகொண்டிருக்கவே, சிலகாலத்தின் பின்பு ஒருநாள் சுக்கிரபகவானை நோக்கி நான் வந்தகாரியஞ் சித்தியாயிற்று. ஆகையால் எனக்குப் போகவுத்தரவுகொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டான். சுக்கிரபகவானும் அவனை ஆசீர்வதித்து அனுப்பிவிட்டான். அக்கஜனோ அவனிடத்தில் உத்தரவு பெற்றுக் கொண்டு தெய்வயானையிடத்தில்வந்து நான்வந்த காரியம் சித்தியாயிற்று. நான்போக விடைகொடுக்கவேண்டு மென்றான். தெய்வயானையோ என்ன செய்வோம்! நமது கருத்து நிறைவேறாமற்போகின்றதே! நாம் நமதுகருத்தைத் தெரிவிக்கலாம் என்று துணிந்து கஜனே நீயோ சுரகுருமகன், நானோ அசுரகுருமகள், நாமிருவருமோ எவ்வகையினும் ஒப்பு. என்னைப்பாணிக்கிரகணஞ்செய்துகொண்டு சுகமாயிருந்துவிடும், உனக்கு ஒருவேளைஇவ்விடத்திலிருக்காமல் அவ்விடத்திலே யிருக்கலாமென்று சொன்னாலும் வந்துவிடுகிறேனென்றுசொல்லிப் பின்னும் நீ உன்தந்தையை அழைப்பித்துஎன்தந்தையின் இஷ்டப்படி என்னைமணம்புரிவதே தகுதியென்றுவேண்டிக்கொண்டாள். கஜன் இச்சொல்லைக்கேட்டு இரண்டு கைகளாலும் இருசெவியும் பொத்திக் கொண்டு தாயே! நீயோ சகலவேதபுராணங்களிலும் நல்ல உணர்ச்சியுடையளாய் என்னிலும் எண்மடங் கதிகமாகக் கல்விகேள்விகளிலும் சிறந்திருக்கின்றாய், நானோ உன்தந்தையிடத்திலேயே சகல வேதபுராண சாஸ்திரங்களையுங் கற்றுவல்லவனானேன். மேலும் பெறுதற்கரிய சஞ்சீவிமந்திரத்தையும் பெற்றேன். "தவமதுசெய்தே பெற்றெடுத்தவன் முதற்பிதா தனைவளர்த்தவனொருபிதா, தயவாக வித்தையைச் சாற்றினவ னொருபிதா சார்ந்தசற்குருவொருபிதா, அவமறுத்தாள்கின்ற வரசொருபிதாநல்ல வாபத்துவேளை தன்னில், அஞ்சலென்றரியதுயர் தீர்த்தவனுமொருபிதா வன்புடையவனுமொருபிதா, கவளமிடுமனைவியைப் பெற்றுளோனொருபிதா கலிதவிர்த்தவனொருபிதா, காசினியிலிவரை வித்தமுமேபிதாவென்று கருதுவதுநீதியாகும்." என்று நீதிநூலும் கூறியிருக்கின்றதே, ஆதலால் உன்னை மணம்புரிவது தகுதியல்

ரவே என்று மறுத்துக்கூறினாள். அதுகேட்டு இலவுகாத்த கிளிபோல் ஏங்கி ாடி முகம்புலர்ந்து நீ என்கருத்திற்கிணங்காமல் விசுவாசகாதகஞ்செய்தமை ால் நீ என் தந்தையிடத்திற்பெற்ற சஞ்சீவிமந்திரம் உனக்குப்பலிக்காதிருக் க்கடவதென்று கடுஞ்சாபமிட்டாள். அதையுணர்ந்த க எனக்குப்பலியா பினும் என்னிடத்தில் கேட்டவர்க்கேனும் பலிக்குமல்லவா என்றுசொல்லி, ' சாஸ்திரவிருத்தமாகச்சபித்தமையால்நீபிராமண மாதாயிருந்தும்நிலவுலகத் ரசனே மணம்புரிவாயென்று சாபமிட்டு கஜன் தன்தந்தையிடம் அடைந்து அவருக்கு அம்மந்திரோபதேசஞ்செய்து அவரால் இந்திரனுக்கு வெற்றியுண் டாக்கினன்.

கஜன் போய்விட்டபின்பு தெய்வயானை அசுரகுலத்தரசனுகிய சன்மிஷ் டையுடன் மிகநட்புக்கொண்டு, பூக்கொய்தல், பந்தாடல்,கழங்காடல்முதலிய வற்றைச்செய்து ஒருபொழுதும் பிரியாமலிருந்தாள். ஒருநாள்தான் சன்மிஷ் டையுடன் பூங்காவனத்திற்சென்று பூக்கொய்து விளையாடி தடாகத்தில் ராடிக்கொண்டிருக்குஞ் சமையத்தில் சூறுவளிவந்தடித்து அவர்கள் கரை பில்வைத்த ஆடைகளை யெல்லாம் ஒன்றுகக் கலக்கச்செய்துவிட்டது. அத றல் இருதிறத்தார் பாங்கிமாரும் இன்னூர் உடுத்த ஆடை யிதுவென்றறியா மல் தெய்வயானை ஆடையைச் சன்மிஷ்டைக்குக்கொடுக்கச் சன்மிஷ்டை அதைவாங்கியுடுத்தாள். தெய்வயானையினிடம் சன்மிஷ்டை ஆடையைக் கொணர்ந்து நீயுடுத்திருந்த ஆடையைத் தெய்வயானை யுடுத்திக்கொண்டிருக் கிறுளெனத் தெய்வயானையும் நாமென்னசெய்வது என்று சிந்தித்துச் சன்மி ஷ்டையை நானுடுத்த ஆடையைக் கேட்டுவாருங்கோளென்று கட்டளையிட் டாள். அத்தாதிகளும்அவ்வாறேசென்றுகேட்கையில் சன்மிஷ்டையும்தெய்வ யானையிடத்தடைந்து நீயுடுத்திருந்த ஆடையோ மிகச்சொற்பமாயும் இருக்க, அதைவெறுத்து நான் உடுத்த ஆடையுடுக்கலாகாதா? என்வெறுக்கின்றனை யென்றுசொல்ல, தெய்வயானையும்கேட்டுச் சொல்வாளாயினள். சன்மிஷ் டையேஎவ்வாறிருக்கினும்நானேஅந்தணன்மகள்,நீயோஅரசன்மகள்,நீயுடுத்த அழுக்காடையை நான் உடுக்கத்தகுமோ வென்றுள். இவ்வாறுசொல்லவே சன்மிஷ்டை சினங்கொண்டு "இருவேறுலகத்தியற்கை திருவேறு-தெள்ளிய ராதலும்வேறு." எனத்தேவருமருளிச்செய்திருக்கின்றனர்; உன்தந்தைஎன்ன இன்றும் என்தந்தையிடம் கையேந்திவருகின்றனன். நீயோ இவ்வாறு இறு மாந்துகூறுவது தக்கதன்று என்றுகூறி, தெய்வயானையை அங்குள்ள பாழ்ங் கிணற்றில்தள்ளிவிட்டுத் தன்தாதியருடன் சென்றுள். தெய்வயானை கிணற் றில்வீழ்ந்ததே தெய்வகதியால் அங்குமுளைத்திருந்த ஓர் கொடியைப்பற்றிக் கொண்டு ஏறவகையறியாமல் உயிர்ச்சேதமின்றியிருந்தாள். அச்சமயத்தில் சந்திரவமிசத்தரசனுகிய யயாதிமகாராஜன் தன்பரிவாரங்களுடன் வேட்டை யாடச்சென்று நீரபேட்சையால் இப்பாழ்ங்கிணற்றினையடைந்தான். அடைய வே பூரணசந்திரோதயமென்ன விளங்கும் முகத்தையுடையஓர்மாதுகிணற்றில் தோன்றக்கண்டு நீயார்! இக்கிணற்றில் வீழ்ந்திருப்பானேன்? உன்வரலாற்றை அவ்வாறுசொல்லென்று கேட்டான். தெய்வயானையும் நான் அசுரகுருவா

கிய சுக்கிரபகவான்மகள் ! என்பெயர்தெய்வயானை யென்பர்என்றுசொல்லிப்
பின்பு தன்னை விடபன்மாமகளாகிய சன்மிஷ்டையென்பவள் கிணற்றில்வீழ்
த்திச்சென்றாளென்ற தனவரலாற்றைச் சொல்லாமல் மறைத்து என்னைக்கரை
யேற்றுமென்றுவேண்டினாள். அரசனும் வியந்து இரவலர்க்குப் பொன்னைப்பு
யல்போற்பொழியும் தன்கையால் அத்தெய்வயானையின் தாமரைமலர்போன்ற
கையைப்பிடித்து எடுத்துவிடுத்தான். தெய்வயானை அரசனிடத்தில் விடை
பெற்றுத் தான் தன்னகரிலே தனக்குநேரிட்ட அபாயங்களை யெல்லாம் நினை
த்து இவ்வளவும் சுரகுருமகளாகிய எனக்குநேரிட்ட சாபமேயென்று உள்ளங்கலங்கி
நைந்து பெருமூச்சுவிட்டுத் தன்னை நிலவுலகபுரந்திடும் அரசன் கைப்பிடிக்க
நேரிட்டதே என்றுருகிநின்றாள். அரசனும் தன்பரிவாரங்கள் சூழத்தெய்வ
யானையிடத்தே விடைபெற்றுத் தன்னகரமேசென்றடைந்தான்.

இவ்வாறிருக்கத் தெய்வயானையும் இனிநாமென்செய்வது [illegible]
நூலோர் கூறுமபுணர்ச்சியோ மூவகையாம். அவையுடற்கருபுணர்ச்சி, புன
றருபுணர்ச்சி, களிறுதருபுணர்ச்சி யென்பன. அவற்றுள் [illegible]
புணர்ச்சியால கிணற்றிலிருந்தெடுத்து கைதொட்டுப் போயினன் என்று
நினைந்து ஒருமாதத்திலிருந்து [illegible]. அப்பொழுது [illegible]
சாரதியொருவன்தெய்வகதியால அம்மார்க்கமாய்ச் [illegible] தெய்
வயானையைக்கண்டு வணங்கி அம்மா! [illegible]
காரணமென்னவென்றுவினாவினான். தெய்வயானை அச்சாரதியை [illegible]
உன்னரசன் மகளாகிய சன்மிஷ்டையும் இப்பூங்காவிற்கு வந்தோம். என
ஆடையை உன்னரசன்மகளுடுத்திக் [illegible]
நான் அதுமுறையல்லவென்றேன், அதற்கு [illegible]
னைப்பாழ்ங்கிணற்றில தள்ளிவிட்டுப்போயினாள். [illegible]
கறிவிப்பையாயின இப்பொழுதே [illegible]
பலவாறு வேண்டிக்கூற, [illegible]
சுக்கிராசாரியனிடஞ்சென்று வணங்கி தெய்வயானை [illegible]
கிரமமாகச் சொல்லிவணங்கிப்போனான். சுக்கிராசாரியும் [illegible]
தோன்றுந்தோன்றாமல நமதுமகளாகிய தெய்வயானையைச் சன்மிஷ்டை இப்
படியும் செய்துவிட்டாளே ! நமக்கு அவள் பெருந்தவத்தாற் பிறந்த பெண்ணா
யிற்றே! இவளுக்கோ இப்படிவருமென்றால அதிசயமாக இருக்கின்றதேயென்று
எண்ணித் தன்மகளிருக்கும் பூஞ்சோலையையடைந்து மிகுந்த ஆசையுடன்
தழுவிக்கொண்டு அம்மா! உனக்கும் இப்படிப்பட்ட துன்பம்வருமா! இந்நா
ளும் சன்மிஷ்டையுடன் விளையாடிவருகின்றவளாதலால இன்றும் அப்படியே
வருவாயென் றிருந்துவிட்டேனல்லாமல் வேறல்ல. என்மேற் கோபங்கொ
ள்ளவேண்டாமென்று இங்கிதவார்த்தைசொல்லுகின்றான். தெய்வயானையும்
தன்பிதாவாகிய சுக்கிராசாரியர் பாதங்களில் அடியற்றபனைபோல்விழுந்து
கோவென்றுபுலம்பி நீசனாகிய அரக்கன்மகள் என்னுடையை யுடுத்திக்கொண்
டதுமல்லாமல் என்னையுங் கிணற்றில் தள்ளிவிட்டுப்போனாள். இனி நமது

பிழைப்பென்ன இருக்கின்றது! மிகவும் அற்பர்களிடத்திலும், நமது அருமை பெருமை தெரியாதவர்களிடத்திலும் கோடிசம்பாதித்தும் பிரயோசனமில்லை. மதியார்வாசல் வழிமிதிக்கவேண்டாமென்றுஞ் சொல்லியிருக்கின்றார்கள். இப்படிப்பட்ட விடத்தில் நாம் ஜீவிப்பதைப்பார்க்கிலும் நமது அருமை பெருமையறிந்த விவேகிகளிடத்திற் சொற்ப ஜீவனஞ்செய்துவாழ்வதே உத்தமமென்று சொல்லிவிட்டு இனி விடபன்மாவிடத்தில் அரைக்கணமும் போகப்படாதென்று வேண்டினாள். அதற்குச் சுக்கிராசாரியும் தெய்வயானையைப் பார்த்துச் சொல்லுகின்றார். என்னருமைமகளே! நீயுஞ்சிறுகுழந்தை! சன்மிஷ்டையுஞ் சிறுகுழந்தை, பெண்களைநோக்கி 'பேதைமை யென்பது மாதர்க்கணிகலம்' என்று நீதிநூலும் முறையிடுகின்றது. அதிலும் நீங்களும் வயதுவந்தவர்களல்ல, இதனை அந்தச்சன்மிஷ்டையைப் பெற்றெடுத்த விடபன்மாவை நோவது தகுதியல்ல. ஆயினும் உன்மனக்கருத்தின்படி இப்பூஞ்சோலையிலேயே ஒருபர்ணசாலையைக்கட்டிக்கொண்டு வசிக்கின்றேனென்று அங்கோர் பர்ணசாலையைக்கட்டிக்கொண்டு தன்மகளாகிய தெய்வயானையுடன் வாசஞ்செய்துவந்தார். இப்படி யிரண்டொருநாள் கடந்தபின்பு சுக்கிரபகவானில்லாத அவ்விடபன்மாவினுடைய சபை தாமரையில்லாத தடாகம்போலவும், சூரியனில்லாத பகல்போலவும், அரசிழந்த நகரம்போலவும், சந்திரனில்லாத இரவுபோலவும் தோன்றியது. விடபன்மா தன் மந்திரிமாரைநோக்கி நமது குலகுருவாகிய சுக்கிரபகவானை நமது சபையில் இரண்டு மூன்றுநாளாகக் காணாமலிருக்கின்றோம். அவர் வராமைக்குக் காரணமியாது? விசாரித்தறியுங்களென்றான்

அவ்வாறு சொல்லக்கேட்டவுடனே மந்திரிமாரும் தூதுவரையனுப்பிச் சுக்கிராசாரியரைத் தேடச்சொன்னார். அத்தூதுவர்போய்த் தேடிக்காணாமல் மீட்டும் மந்திரிமாரிடத்தில் சொல்ல, அவர்களும் அரசனிடத்தில் இதனைவிண்ணப்பித்தனர். அரசனும் இதென்னபுதுமை! நமது குருசிகாமணியோ நம்மையன்றி ஒருவரையும் அனுசரிக்கமாட்டார். எங்கே போய்விட்டாரென்று சிந்தைகலங்கி நொந்து இனி ஒரு முகூர்த்தகாலத்துக்குள் தெரிவிக்கவேண்டுமென்று கொடிய ஆக்கினைசெய்துவிட்டான். அதுகண்டு மந்திரிமார் சிந்தை நைந்து நொந்து செய்வதொன்றுந்தோன்றாமல் திப்பிரமைகொண்டு மனம் சுழற்காற்றைப்போலசுழலின்று மறுமொழியொன்றுஞ்சொல்லாமல் அரசன் கட்டளைப்படி திரிந்து தேடத்தலைப்பட்டார்கள். இப்படி தேடித்திரிவதைப் பார்த்தவிடபன்மா சாரதி அவர்களைவணங்கிச்சுக்கிராசாரியிருக்கும் இடத்தை உங்களுக்குக் காட்டுகின்றேன் என்று அரசனிடத்திற்கு அழைத்துக்கொண்டு போய் நடந்தவரலாற்றைச் சொல்லுகின்றான். மகாராசாவே! ஒருநாள் நமது குருமகளாகிய தெய்வயானையும், தங்கள் மகளாகிய சன்மிஷ்டையுமாக ஒரு பூஞ்சோலைக்குச்சென்று மலர்கொய்து விளையாடி பின்னே ஒருவாவியிலிறங்கி நீராடினர். ஒரு சுழற்காற்றடித்து அவர்கள் கரையில்வைத்துப்போன ஆடையைக் கலக்கிவிட்டது. நமதுகுருமகளாகிய தெய்வயானையுடைய ஆடையைச் சன்மிஷ்டை கட்டிக்கொண்டாள். தெய்வயானையோ தன்னுடையைக்கேட்

அதற்குச்சன்மிஷ்டை தெய்வயானையை பலகொடுஞ்சொற்களால் வைது கிணற்றில் தள்ளிவிட்டுப்போனாள். பின்பு தெய்வகதியாக வேட்டையாடவந்த பூலோகத்தரசனொருவன் அககிணற்றில வீழ்ந்திருந்த தெய்வயானையைக் கரையேற்றிப்போனான் என்று எனக்குத் தெய்வயானைசொலலி, என்பிதாவுக்குமாத்திரம் இச்சேதியைத்தெரிவியென்றுசொலல, நானப்படியே சுக்கிராசாரியிடத்திலே தெரிவித்தேன்; சுக்கிராசாரியரோ தன்மகள் இருக்கிற அப்பூஞ்சோலையிலேயே யிருக்கிறா, இதுதான் நடநதசமாசசாரம; என்னோடு வந்தால் நான்சுக்கிராசாரியா இருக்குமிடம காட்டுகின்றேனென்று வணங்கிச் சொன்னான். அவ்வாறு அவன்சொலலக்கேட்டு ஆனந்தக்கடலிலழுநதி அவனைத்தொடாந்துசென்று முன்கண்ட அச்சோலையிற்காணாமல சுற்றித்திரிந்து பின்பு ஒருபாணசாலையில தன்மகளாகிய தெய்வயானை தநதைக்குரிய [illegible]டைசெய்துவாச் சுக்கிராசாரி தவஞ்செயதிருபபதுகணடு ஓடோடிய[illegible] பனையைமரமபோலவிழ்ந்துநடுநடுத்து வாய்புதைத்துக் கைகட்டி [illegible] ந்தபபக்தியோடுநின்று 'சிறியோாசெய்த சிறுபிழை யெலலாம - [illegible] பாராபிற பொறுபபதுகடனே' என்றபடி தஙகள்விஷயத்தில அபசாரஞ்செய்தவளோ மிகவுமஇளமைபபருவமுடைய பெணகுழநதை, இதனையறிந்திருந்தும இவ்வாறு தேவரீா கோபங்கொணடிருபபது தகுதியாமா? அப்படியே எனமகள் அக்கொடிய குற்றஞசெய்தாளெனறு அடியேனுக்கு அறிவித்தால நான தணடியாமலு மிருபபேனா? அரசனுக்கு அபலாா, பகைவர், உறவினரெனவுமுணடா? இதனைத் தேவரீா அறியாமலு மிருபபதா? என்றுசொல்லிப பின்னுஞ்சொலலுகின்றான்.

தாங்கள் என்னைவெறுத்தால என் அரசாட்சியும நிலைபெற்றிருக்குமா? எனக்குப்பகைவராகிய தேவாகள் என்னை நாசப்படுத்தமாட்டாரகளா? என செல்வமும், ஆண்மையும, கலவியும, பெருமையும, வெற்றியும உம்முடையனவேயன்றோ! என்குருசிகாமணியே என்னகரத்திற் கெழுந்தருளிவந்து என்னைக்குலத்தொடுங் காக்கவேண்டுமென்று வேண்டிக்கொண்டான. அச்சுக்கிராசாரியோ தன்மாணாக்கனாகிய விடபன்மாவினது வேணடுகோளுக்கிசைநது தன்மகளாகிய தெய்வயானை அனுமதியால்தான்வரவேணடுமென்று குறிப்பித்தான். அதுகண்டு விடபன்மாவும் குருபுத்திரியாகையால் தெய்வயானைபாதத்தில்வீழ்ந்துவணங்கி சன்மிஷ்டையோ மிகவுஞ் சிறுபெண, அவளறியாமற் செய்த பிழையத்தனையும் பொறுத்தருளவேணடுமென்று வேணடிக்கொண்டான். தெய்வயானையோ விடபன்மாவைப்பாாத்துக் கண்களில நெருப்புப் பொரிபறக்க உன்மகள்செய்தகுற்றத்திற்குக் கொலைசெய்தேயிருக்கவேண்டும், நீமிகவும் அரியதவஞ்செய்துபெற்ற பெண்ணாகையால் மனமபொறுத்தேன், நீயேவந்து வேண்டிக்கொண்டமையால் ஒரு தண்டனைவிதிக்கின்றேன்; அத்தண்டனையாவது உன்மகளும், உன்மகளுக்குரிய தோழிகளும் எனக்குக்குற்றேவல் செய்பவராயிருக்கவேண்டும், அவ்வாறு செய்துவருவாரோயாயின் அதுவே உயிர்க்கொலை செய்யுந்தண்டனையைப்பார்க்கிலும் எண்மடங்கதிகமென்றெண்ணவேண்டுமென, அவ்வாறே செய்விக்கின்றேன் என்னகரத்துக

கெழுந்தருளவேண்டுமென்று வேண்டிக்கொண்டு நின்றான். தெய்வயானை அதற்கிசைந்து தன்பிதாவுடன் முன்போலவே விடபன்மாவினுடைய நகரமே போய்ச்சேர்ந்தாள்.

விடபன்மா தன்மகளையழைத்து நீ குருபுத்திரி யென்று சிறிது மெண்ணு மல் பாழ்ங்கிணற்றில் தள்ளிவிட்டு வந்தமையால் நீயக்குற்றத் தின்பொ ருட்டு பணிப்பெண்ணாயிருக்க வேண்டுமெனக் கட்டளையிட்டு அவள்தோழிய ருடனனுப்பினான் சன்மிஷ்டையும் தன்தோழியருடன் அவ்வாறேவந்து தெய்வயானையைவணங்கிப் பணிப்பெண்ணாயினாள் இவ்வாறு சிலகாலஞ்செ ன்றபின் ஒருநாள் தெய்வயானையும் தன்பணிப்பெண்ணாகிய சன்மிஷ்டையுட னும், அவள் தோழியருடனும் புறப்பட்டு ஒருபூஞ்சோலையைக்கண்டு மலர் பறித்து விளையாடிக்கொண்டிருந்தனர். அச்சோலையின் சிறப்பினையும், பரிமள சுகந்த வாடைவீசுவதையுங்கண்டு யயாதிமகாராசன் இதென்னவினோதமான காட்சியுடைத்தா யிருக்கின்றதென்று அதனைமுழுதுஞ் சுற்றிப்பார்த்துக்கொ ண்டுவந்தான், அப்படி வருகிறபோது தெய்வயானையையும், சன்மிஷ்டையையுங் கண்டான். அவர்களில் தெய்வயானையைத்தான் பாழ்ங்கிணற்றிலிருந்து எடு த்துவிட்ட பெண்ணென்பதனையு முணராமல் இவர் நீரரமகளோ, மலையில் வசிக்குந்தெய்வமோ, திருமகள் அம்சாவதாரமோ, பாரமகள் அம்சாவதார மோ, இந்திராணியின் அம்சாவதாரமோ என்று நினைத்து, இப்படிப்பட்ட மாதரை யொருநாளுங் கண்டதில்லையெனத் திகைத்து நீங்கள் யாரென்று வினவினான். முன்னமே இந்த யயாதிமகாராசனையே மணஞ் செய்துகொள்ள வேண்டுமென்று கருணைக்கடலாகிய கிரிராசகன்னிகையைநோக்கி நோன்பு நோற்பதினால் விரைவிலெழுந்துவந்து அரசனுக்கு ஓராசனமளித்து அதில் இருக் கச்செய்து, அர்க்கிய, பாத்தியமுதலிய சோடசோபசாரமுஞ்செய்து அர சனைநோக்கி என்னை யறியீரோ என்றாள்; அதைக்கேட்டு அரசன் மௌனமாயு நின்றான். அதற்குத் தெய்வயானையும் நின்புயவலியினாலன்றோ பாழுங்கிணற்றி னின்று மெடுத்தவரல்லீரோ! அரசருக்கித்தனை மறதியு முண்டோ! நான் சுக்கிரபகவான்மகள்; இதோநிற்கின்றவள் விடபன்மா என்னும் அரசன்மகள்; இவள்இப்போது எனக்குப்பணிப்பெண்ணாயினாள்; இவளையும் என்னையும் மண ஞ்செய்துகொள்ளுமென்று வேண்டினாள். அரசன் இச்சொல்லைக்கேட்டுத் திப் பிரமைகொண்டு அரசன் அந்தணர்மாதை மணம்புரியலாகாதென்று அறநூல் கூறுகின்றது; நான் அறநூலுக்குவிருத்தமாக நடக்கக்கூடாதென்று மறுத்தான். தெய்வயானையும் எவ்வாறேனும் நீர் மணமசெய்து கொள்ளவேண்டுமென்று வேண்ட யயாதிமகாராசனும் சற்றுநேரஞ்சிந்தித்து உன்தந்தை அக் கட்டளை யிட்டால் மறுக்கேன், அவரிசைந்தால் செய்துகொள்வேனென்றான். தெய்வ யானையும் சுக்கிரபகவானைவருவித்து அவருக்குச் சோடசோபசாரஞ்செய்து ஆசனமொன்றி லிருக்கச்செய்து என்னைக்கிணற்றிலிருந்துதன்கையாலெடுத்த மகாபுருடன் இவ்வரசனேயாகும்! இவ்வரசனையே நாடி நான் கவுரிவிரத நோன்பை நோற்றேன்; இவரை மணஞ்செய்வியுமென்று வேண்டச் சுக்கிர பகவானும், யயாதியைநோக்கி அரசன் அந்தணர்மாதை மணம்புரியலாகாது

ஆயினும் என்மகளுக்கு வியாழபகவான் மகனாகிய கஜனிட்ட சாபமொன்றிருக்கின்றது அது அரசனையே விவாகஞ்செய்துகொள்ள வேண்டுமென்பதே. ஆகையால் இவளை மணஞ்செய்துகொள்ளுமென்று அவ்விடத்திலேயே சகல வஸ்துக்களையு மழைப்பித்துப் பச்சைப்பந்தரிட்டுவிடபன்மாவையும்வருவித்து நல்ல சுபமுகூர்த்தத்தில் மணஞ்செய்வித்துப் பின்பு சன்மிஷ்டையையும் அவ்வரசனுக்கே மணஞ்செய்வித்தான். அரசனும் தன்மனைவியர் இருவருடன் சுக்கிரபகவானைவணங்க, சுக்கிரபகவான்அரசனைநோக்கி என்மகள் அந்தணர் மாதாகையால் நீயிவளைவிழைந்திருக்கலாமேயன்றி மற்றொருவரையும்விழையலாகாது, இச்சன்மிஷ்டையிடத்தே இன்பமகன்றி மற்றபோகங்களை யனுபவிக்கலாமென்று கட்டளையிட்டு இவர்களோடு சுகசீவியாய் வாழ்கவென்று ஆசீர்வதித்தனுப்பினான். யயாதிமகாராசன் சுக்கிரபகவானிடத்தும், விடபன்மாவிடத்தும் விடைபெற்றுச் சென்றுதன்னகரஞ்சேர்ந்து நகரமாந்தர்களுக்கு விருந்தளித்து அந்தப்புரத்தில் சன்மிஷ்டைக்குத் தனிமிடோன்றமைத்து அதிலிருத்தித் தான் தெய்வயானையோடு அன்றில்விழைபோக மயர்ந்தான். இவ்வாறுநடந்துவருநாளில் தெய்வயானையும் தானும் கொஞ்சிக்குலாவி விளையாடிக்கொண்டிருக்கையில் தெய்வயானையோ நித்திரைசெய்துவிட்டாள். அரசனோ நித்திரைவாராமல் வருந்தித் தான்வாழுஞ் சிங்கார மாளிகையிலுள்ள பூங்காவைநோக்கிச்சென் றுலாவிவருகையில் அப்பூங்காவில் மல்லிகை, முல்லை, இருவாட்சி, சண்பகம் முதலிய பூங்கொடிகள் மலர்சொரிந்து மணம்பரப்பவும், இளந்தென்றல் வீசவும், பூரண சந்திரோதயத்தால் சந்திரிகைபாற் கடலின் அலைபோல்விளங்கவும்கண்டு அன்றிரவுமுழுதும் விநோதமாக உலாவிவருவதே நலமெனத்துணிந்து உலாவிவருவானாயினான்.

இப்படி அரசன் உலாவிவருந்தருணத்தில் சன்மிஷ்டையோ அரசன் தன்னை எவ்வளவு சுகத்திலிருத்தினும் புருஷசுகமொன் றிலாமையால் நெஞ்சநொந்து இதற்குக் காரணம் தெய்வயானையைக் கிணற்றில் தள்ளினமையே, இதுவோ நமது பிழையேயன்றி வேறல்லவென்பதையும் எண்ணி நமக்கு சகல பாக்கியமிருந்தும பயனென்னவென்று நைந்து நைந்து நெக்குருகி நமக்குநாயகன் அருகிலிருந்தால் சுகமனுபவிக்கலாமேயென்று வருந்துகையில், ஆளரவங்கண்டு இவ்விடத்தில் அரசனொருவனையன்றி வேறொருவரும் வரக்கூடாதே, அப்படிப்பட்ட இவ்வந்தப்புரத்தில் அரசன்வரக் காரணமென்ன! நாம்கொண்டகாமவெறியோ! அல்லது அரசனோ உண்மையாகவந்தானோ! அறிவோமென்று புறப்பட்டுப்பார்க்கையில் அரசனாகவே யிருக்கக்கண்டு வணங்கி, நானோ அசுரகுலத்தரசன்மகள்! நான் பரம்பரையில் பணிப்பெண்ணல்ல, உமக்கு நான்மனைவியே, காலகதியால் தெய்வயானைக்குப் பணிப்பெண்ணானேன் கொடிய வினையே செய்தது என்றுசொல்லிக் கலவிக் குறிப்புணர்த்தி வருத்த, அரசன் உன்னைப் புருஷபோகமொன்று ஒழித்து மற்றெல்லாச் சுகமனுபவிக்கக் கட்டளையிட் டிருக்கின்றார், 'மூத்தோர்சொல் வார்த்தை யமிர்தம்' என்றபடி நான்மறுப்பது தகுதியேயல்ல, என்அரசாட்சிக்குப்பழுது வரும் என்று மறுத்துக்கூறினான்; அதற்குச் சன்மிஷ்டையோ அரசனை

நோக்கி அந்தணர் முன்னிலையினும், பசுவின்முன்னிலையினும், ஓருயிர்க்கிடை யூறுவந்தபோதும் கட்டுரை தவறினுல் குற்றமில்லையென அறநூல் விதித்திருக் கின்றதே, ஆகையால் என்னைக் கலந்துபோமென வேண்டினுள்; அரசன் அவ் வளவு சொல்லியும் கேளாமல் மௌனமாகவே யிருந்தான். சன்மிஷ்டை அரசன்குறிப்பறிந்து அரசனைநோக்கி எனக்கொரு வரந்தரவேண்டும், அதா வது என் உயிரையொத்த நட்பினையுடைய தெய்வயானை புத்திரபாக்கியம் பெற்றிருக்கின்றுள் ; அவ்வாறே எனக்குமுண்டாம்வண்ணம் பாலியுமென்று வேண்டினுள். அதற்கு அரசன் சிநதைநொநது மோசம் நேர்ந்ததே! இனி என்செய்வதென்று சிந்தித்து நாம் இவள் கேட்டதற்கு மறுத்தால் தரும விரோதமாகின்றது, அலலது கொள்வோ மென்றுலும் பெரியாரைப் பிழைத் தமையு முணடாகும, எவ்வாறேனும பெரியாரெனப்படுவோர் தம்மையடுத் தவரைக் காப்பதே விரதமெனக்கொண்டு வாழ்கின்றனர். நாம் இவளைக்கூடிப் புத்திரபாக்கியம் உணடாக்குவதே நலமென்று துணிந்து அவளை அச்சோலையி லுள்ள சந்திரகாந்தக் கல்லினுல அமைத்த மாளிகையிற் கொண்டுசென்று கூடிக் கலநது பின்பு தெய்வயானை படுத்திருந்த அறையில்வந்து படுத்துத் தூங்கி இவ்வாறு சிலகாலம நடந்துவந்தான். 'அறைவீட்டுக்கதை அம்பலத்தி லிழுத்துவிடும்' என்ற பழமொழிபோல அரசன் இவ்வாறு களவில்செய்து வரும் களவிப்புணர்ச்சியை வெளிப்படுத்த சன்மிஷ்டையோ கருக் கொண் டாள். இதனை புணாநத அரசனே பயந்து இனி என்னசெய்வோம்! யாரிடத் திற்சென்று முறையிடுவோம! வரவேண்டியது வந்தேதீரும், நமது மனைவி பறிநதால தன்பிதாவாகிய சுக்கிரபகவானுக்கறிவிப்பாள். அவா ஏதுசாபமிடு வரோ என்று பயந்திருநதான். சன்மிஷ்டையோ நல்ல சுபமுகூர்த்தத்தில் ஒருபுத்திரனைப் பெற்றுள். தெய்வயானையோ அதனை மகோற்சவமாகக் கொணடாடினுள். ஒருநாள் தெய்வயானை நமது பணிப்பெண்ணுகிய சன் மிஷ்டையோ கற்புடையவளாயிற்றே! இவ்வளவு காவலுள்ள இவ்விடத்தி லிருநதுகொணடு எவ்வாறு மைநதனைப் பெற்றுளென்று எண்ணி நாம் நேரே போய் அறிவோமென்று துணிநது சன்மிஷ்டையிருக்கும் இடத்தையடைந்து சன்மிஷ்டையே நீ எவ்வாறு மைந்தனைப் பெற்றுய்! உள்ளது உள்ளபடி சொலலவேணடுமென்று கேட்கச் சன்மிஷ்டையும் நடந்த வரலாற்றை உள்ளவாறுசொன்னுல அரசனுக்குத் தீமைவருமென் றெண்ணி ஒருபோக் காகச் சொலலிவிடுவதே நலமென்று அன்னய்! இவ்விளமரச் சோலையில நான் வெளிப்பட்டுவந்தேன், அப்போது ஒரு முனிவர்பெருமான் எழுந்தருளி னந்தனர். அவரை வணங்கி ஐயனே! எனக்குப் புத்திரபாக்கிய முண்டாக வேண்டும் என்று வேணடினேன், அவா என்கையில் திருநீற்றையள்ளிக் கொடுத்து இதனை யுட்கொண்டால உனக்குப் புத்திரபாக்கியமுண்டாமென்று சொல்லிபோயினா, நான் அவ்வாறே உட்கொண்டு கருக்கொண்டேன், இது தான் வரலாறென்று பட்டமஹிஷியாகிய தெய்வயானைக்கு அறிவித்தாள்; தெய்வயானையும் தன் மக்களைப்போலச் சன்மிஷ்டைமகனையும் சீராட்டிவரக் கட்டளையிட்டாள். இதுநிற்ச

அரசனோ சன்மிஷ்டையை விடாமல் முன்போலவே இன்பமனுபவித்துக்கொண்டுவர அவளும் இரண்டுமக்களை மீட்டும் பெற்றாள். தெய்வயானை இது காரணமென்னவென்று வினவ, சன்மிஷ்டை முன்போலவே சொல்லக் கேட்டுத் திரும்பிப்போனாள். இவ்வாறு போயினபின்பு ஒருநாள் இம்மூவரும் வீதியில் விளையாடிவர உப்பரிகையின்மேலிருக்கும் தெய்வயானை இவர்கள் மிகச் சுந்தரவடிவுடையாராய் அரசனது வடிவத்தை ஒத்திருக்கக்கண்டு அவர்களை வரவழைத்து நீங்கள் யார்! உங்கள் தாயார்! தந்தையார்! உள்ளவாறு சொல்லுமென்று கூற, அச்சிறுவரும் தங்களுடைய தாய் சன்மிஷ்டையென்றும், தந்தை இம்மகாராஜனென்றும் மறையாமற் கூறி நின்றனர். அரசனுந் திகைத்துநின்றான். தெய்வயானை இம்மொழிகேட்டு வருந்தி தன்னருகிருந்தவரால சிவிகை கொணர்வித்துச் சொல்லித் தன் பிதாவினிடத்திற் சென்று நடந்த வரலாற்றையுஞ்சொல்லி முறையிட்டாள். சுக்கிரபகவானும் திடுக்கிட்டு என்செய்வதென்று வருந்தி அரசனிடத்தில் அதிக வேகமாகப் புறப்பட்டுவந்து அரசனைக்கண்டு நீஎன்கட்டளையைமீறி நடக்கலாமோ என்று கடுமொழி கூறினான். அதற்கு அரசனும நடந்த வரலாற்றை ஒன்றுமொழியாமல் சொல்லி வணங்கி நின்றான். சுக்கிரபகவானும கோபங்கொண்டு நீ இன்றுமுதல் வார்த்திகதசையை யடையக்கடவை யென்று முன்பின்யோசியாமல் சபித்தான். பின்பு சுக்கிரபகவானை அரசன் பலமுறை வணங்கிவேண்டக் கோபந்தணிந்து நான் கொடுத்தசாபத்தை யனுபவித்துத்தான் தீரவேண்டும்; ஆயினும் இதற் கென்செய்வதென்று நினைத்து நீ வேண்டிக்கொண்டமையால் உன்மக்கள் யௌவனதசை யடையும்பரியந்த மனுபவித்திரும; அதன் பின்பு உன்மக்களுள் ஒருவனுக் கிந்த வார்த்திகதசையை யொப்பித்துச் சுகமனுபவித்து, எந்தமகனிடத்து உமது வார்த்திகதசையை யொப்பித்தீரோ அவனுக்கே யௌவனதிசையையுங் கொடுத்துவிடுவதுமன்றி உம்மரசையுங் கொடுத்துத் தவஞ்செய்யச்சென்று ஈறிலின்பமடையுமென்று சொல்லி, பின்பு தெய்வயானையை நோக்கி நீ சிறிதும் பொறுக்காமல் என்னிடத்தே வந்து முறையிட்டமையால் நான் முன்பின் யோசிக்காமல இக் கொடியசாபமிட நேர்ந்தது என்றுசொல்லித் தன்மகளை வெறுத்துக்கொண்டு தன்னிருப்பிடஞ் சென்றான்.

இங்கே அரசனோ தனக்குச் சுக்கிராசாரியனிட்ட சாபத்தினால் உடல் முழுதுந் தளர்ந்து நரை திரை சேர்ந்து மூப்படைந்து இருமி ஒழுகிய கோலத்தை யுடையவனாய்த் தனக்கு வாலிபமசேர்வதே இதற்கு ஔடதமெனத் துணிந்து வெகுநாள் வருத்தமடைந்து தன்மக்கள் யௌவனதசை யடைவதெப்போதோ என்று ஏங்கியிருந்தான்.

இப்படி சிலகாலஞ் சென்றபிறகு சன்மிஷ்டை மக்களும், தெய்வயானை மக்களும் யௌவன தசையை யடைந்தனர். யயாதி மகாராசன் தெய்வயானைமக்களைநோக்கி உங்கள் யௌவனதசையை எனக்குக்கொடுத்து என் வார்த்திகதசையைச் சிலகாலம் பெற்றிருங்கோள், யானே சிலகாலஞ் சென்ற

பின்பு மீண்டும் உங்களுக்கு யௌவன தசையைக் கொடுத்துவிட்டு வார்த்திக தசையை யேற்றுத் தவஞ்செய்யச்செலவேனென்றனன். அதுகேட்டு அம்மக்கள் இருவரும் ஒருவர்முகத்தை ஒருவர்நோக்கி இதென்ன விபரீதம், விந்தையினும்விந்தையாயிருக்கின்றது! அரசனிடத்து வார்த்திகமேற்றுத் துன்பத்தை அனுபவிப்பதினும் அரசனிடம் சாபம்பெற்று இடையூறுபடல் நலமெனத்துணிந்து, அவனைநோக்கி நீர் சகல பாக்கியங்களையும் அனுபவித்திருக்கின்றீர், நாங்களோ நல்மணம் பாராமற் சிறுவர்கள், இன்னும் யாதொரு சுகத்தையும் அறிய மாட்டோம், ஆகையால் எங்கள் விருப்பத்தில் மன்னிக்க வேண்டுமென்றனர். 'தந்தை சொன்மிக்க மந்திரமில்லை' என்றபடி தந்தைசொல் கடவாதிருப்பதே புத்திரராவார்க்கு உரிய கடமை என்றுசொல்லிக் கோபங்கொண்டு, நீங்கள் அரசனிற்பிறந்திருந்தும் அரசில் வளர்ந்திருந்தும் அரசர்க்குரிய குணமில்லாமையால் வேடராவீரெனக் கடுஞ்சாபமிட்டான். அவர்கள் அவ்வாறே அச்சாபமேற்று வனத்திற்சென்று வனத்தில்வசிக்கும் வேடர்கட்குத் தலைவராய் வாழ்ந்திருந்தனர். அரசனே சன்மிஷ்டையினிடமாகத் தோன்றிய மக்கள் மூவரையும் கூவியழைத்து உங்களிலொருவர் என்னுடைய வார்த்திகதசையை ஏற்று உம்முடைய யௌவனதசையை எனக்குக் கொடுமெனக் கேட்டனன். புரோவன் என்னும் மூத்தகுமாரனொழிய மற்றை இருவரும் ஒப்பாமல் மறுத்தனர். அரசன் அவர்களில் ஒருவனைக் கள்விற்போனாகவும், மற்றொருவனை மீன் விற்போனாகவும் ஆகவெனச் சபித்தனன், அவ்விருவரும் அவ்வாறே ஆயினர்.

மூத்தமகனே தந்தையை வணங்கிநின்று நாம் தந்தைசொற்படி நடப்பதே கடனெனத்துணிந்து நம்மைப் பெற்றுச் சீராட்டி வளர்த்ததற்கு இது தானே பெருதவியென்று எண்ணித் தந்தையின் வார்த்திகத்தையேற்றுத் தன் யௌவனதசையையுதவினன். அரசனே அவ்வாறு அவனிடத்தே யௌவனமேற்றுத் தான் இன்பநலம் அனுபவித்துச் சிலநாள் சென்றபின்பு அவனையழைத்து அவனுடைய யௌவனதசையையுங் கொடுத்ததுமன்றித் தன் அரசையுங் கொடுத்து நான் தவஞ்செய்து மறுமையின்பமடையக் காட்டிற் செல்கின்றேனென்று விடைபெற்று தெய்வயானையையும், சன்மிஷ்டையையும் மகன்பா லிருத்திவிட்டுப் பாதுகாக்கவமைத்து, தான் மரவுரி தரித்துக்கொண்டு காட்டிற்சென்று முனிவர்கள் அருள் கொண்டு, அவர்களும் நயமாலும் இவ்வளவு கொடியதவஞ்செய்வதரிதென்று சொல்லும்படி தவஞ்செய்து நின்றன். இவ்வாறு அரசன் தவஞ்செய்வதையறிந்த பிரமதேவன் அவனைக்கிட்டி உனக்கென்னவேண்டுமோ அவ்வரந் தருகின்றேன் என்றுசொல்ல, அரசனே பிரமனை வணங்கி நின்று தாமரைபீடத்தொருவனே! சலசாசன சிறுவனே! யென்று துதித்து நான் எவ்வுலகுஞ் செல்ல நினைக்கின்றேனோ அவ்வுலகத்துக்கெல்லாஞ் சென்று அங்குள்ள விநோதக் காட்சிகளைக் காணவும், உமது சத்தியலோகத்திலே என்றுமிருக்கவும், வேண்டுமென்று கேட்டனன். பிரமதேவனே அவ்வாறே அளிக்கப்பெற்று சத்தியலோகஞ் சென்று அங்குள்ள இன்ப மனுபவித்திருந்தான். இவ்வாறிருக்குநாளில ஒருநாள் தான் இந்திரலோகஞ் செல்லக்கருதி, இந்திரலோகத்துக்குத் தான் பிரமதேவன் வரத்தாற்

பெற்றவிமானமேறிச்சென்றான். தவத்திற்சிறந்த யயாதிமகாராசன் வருவது கண்டு இந்திரனே நாமிவனுக்குத் தக்க மரியாதையே செய்யவேண்டுமென்று பத்தடிதூரஞ்சென்றுஅழைத்துவந்துதான்வீற்றிருந்தசிங்காசனத்தையொத்த ஆசனமொன்றிடுவித்து, அரசனே உமது கருத்திற்கிசைந்த காலமெல்லாம் இவ்வுலகத்தி லிருக்கலாமென்று சொல்ல, அரசனும் அவ்வாறே இந்திர லோகத்திலிருந்தான். ஒருநாள் அரசன்கருத்தைச்சோதிக்கநினைத்து அரசனே! நீயோ மண்ணுலகத்தி லிருந்தகாலத்தில் அசுரகுருவாகிய சுக்கிரபகவான் மகளேயும், அசுரகுல மன்னவனாகிய விடபன்மா மகளாகிய சன்மிஷடையையும் மணஞ்செய்து இன்பநலமனுவித்துப் பின்பு படைத்தற்றொழில் கருத்தாவாகிய பிரமதேவனை நோக்கித் தவஞ்செய்து எவ்வுலக சுகங்களையும் அனுபவிக்கும் பெருந்திருவடையப் பெற்றாய், நின்போற்சிறந்தவர் யாவரென்று வியந்துசொல்லி, தவமென்பது உன்னிடத்தேதான் காணலாமென அரசனோ "தமரோ தம்மைப் புகழ்ந்துரைக்கும் போழ்தில் - அமராததனை யகற்றலே வேண்டும் அமையாரும் வெற்ப வணியாரோ தம்மைத் - தமவேனுங் கொள்ளாக் கலம்" என்ற கருத்தறியாது இந்திரனை நோக்கி, என்போல் தவஞ்செய்தாரை இம் மூவுலகங்களில் எங்குங் காணப்பெற்றிலேன், இருந்தால் காட்டும் என்பதைக் கேட்ட இந்திரன் கோபங்கொண்டு தன்னைத்தான் ஒருவன் புகழ வொண்ணாது, அவ்வாறு புகழ்ந்தால் அவன்செய்த தவமெல்லாம்குறையும் என்று அறநூல்விதித்திருக்கின்றது ; அதையறிந்தும் உன்னை நீயே மதித்துப் பேசிமகிழ்ந்தாய், அதனால் உன்தவம் குறைந்துவிட்டது ; நீ வேண்டிக்கொண்டபடியே அந்தரலோகத்திலிருஎன்று கட்டளையிட்டான். அவ்வாறாகத் தேவதூதர்வந்து நெருங்கி அரசனை அந்தரலோகத்திற்குக் கொண்டுபோய்விட 'வாய்கொழுப்புச் சீலையால் வடிந்தது' என்றபடி தன்னையே நிந்தித்துக்கொண்டு தூதரோடும் அந்தரலோகத்தை யடைந்தான்.

அந்தரலோகஞ்சென்ற யயாதி அந்த உலகின்காட்சிகளையெல்லாம் பார்த்து வருகையில் ஓர்பால் இரண்டு மகாபுருஷரைக் கண்டு நீங்கள் யார்? என்ன தவஞ்செய்து இவ்வுலகத்தையடைந்தீர் உங்கள் வரலாற்றை எனக்குச் சொல்லவேண்டுமென்று வினவினன். அதற்கவர்கள், நாங்கள் சந்திரகுல வரோதயனாகிய யயாதிமகாராஜன் தௌகித்திரர், எங்களுக்குத் தபதிமக்கள் என்று பெயர்; நாங்கள் ஆத்மலாபத்தின் பொருட்டே அருந்தவஞ்செய்தோம், எங்களுக்கிவ்வுலகங் கிடைத்ததென்றனர். அதுகேட்டு அரசனும் நானே யயாதி மகாராஜன், உங்களைக் காணப்பெற்றது என் தவப்பயனேயாகும் என்று தன்வரலாறுசொல்லி அவர்களை வாரித்தழுவி உச்சமோந்து முத்தமிட்டு ஆதரணை செய்தனன். தபதிமக்களோ அரசனை நோக்கி நீரோ தவஞ்செய்ய வனத்திற்சென்றீர், இதுவரையிலும் எந்தவுலகத்திருந்தீர், அந்தவரலாற்றைச்சொல்ல வேண்டுமென்று வருந்திக்கேட்டனர். யயாதிமகாராசனும் தான் தவஞ்செய்தது முதல் அந்தரலோகம் அடைந்ததுபரியந்தமாகிய தன்வரலாற்றை முழுதும் சொல்லத் தபதிமக்கள் கேட்டு எல்லாம் இறைவன்செயலென்று கூறித் தங்களுக்குப் புண்ணியம், பாவம், நால்வகை யாச்சிரமங்களின் இலக்கணம்

இவைகளை நன்றாகவிளக்கவேண்டுமென்றனர். அதற்கு யயாதிமகாராசனும் கூறுகின்றான்.

புண்ணியமாவது பொய், கடுஞ்சொல், பொறாமை, கோபம் என்னும் நாற்குணங்களையு மொழித்துத் தம்மாலியன்றவரையும் பிறர்க்குபகரிப்பது. அவ்வாறு உபகரிப்பதனைத் தாமேசெய்ததாகக்கொண்டால் பிறவிநேரும். பாவமென்பது அந்நாற்குணங்களையு முடையாராய்த்தம்மையடுத்தவர்க்கொன்றுமீயாமையும், தன்னூன் பெருக்கத் தான்பிறிதொருஊனுடம்பைவருத்தித்தின்னலும், குடிப்பிறப்பி னொழுக்கங் குன்ற நடத்தலுமுதலியவாம். நால்வகையாச்சிரமமாவன,— பிரமசரியம், கிருகஸ்தம், வானப்பிரஸ்தம், சந்நியாசம் என்பனவாம். பிரமசரியம் :— ஐந்தாண்டில வேதவிதிப்படி முப்புரிநூலணிந்து சற்குருவைவழிபட்டு வேதாகமங்களைக்கற்று பதினாறு வயதுவரையிலும் அக்குருபரம்பரையிற் பிச்சைபெற்றுண்டு அடைகாய்முதலியவற்றை யருந்தாமல் காலையுமாலையும் சூரியனையும், அக்கினியையும், குருவையும் அன்பொடு பணிந்து மாதரைக்கனவிலும நினையாமல கருத்தைச்செவ்வையாக வைத்திருப்பது. கிருகஸ்தமாவது :— பதினாறு வயதின்மேல் தன்குலத்தின் வேறுகோத்திரப்பெண்ணைவேதாகமவிதிப்படி மணஞ்செய்துகொண்டு, அமாவாசை, பூரணை, மாதப்பிறப்புமுதலிய புண்ணியகாலத்தில போகந்தவிர்ந்து அறத்தின் வழியே தேடியபொருளைத் தென்புலத்தார், தெய்வம், விருந்து, சுற்றம், துறந்தார், துவ்வாதார, இறந்தார, பிரமசாரி, வானப்பிரஸ்தன், சந்நியாசியென்னும் பதின்மருக்கும் பகிர்ந்தளித்து ; விருந்தோம்பல், இன்சொல், அன்புடைமை, அருளுடைமை, புறங்கூறாமை, ஒழுக்கமுடைமை, பொறையுடைமை, பிறனில்விழையாமை முதலியகுணமுடையராய்ப் பிறர்பொருளை யெட்டிக்காயென்றெண்ணி உலகநடையிலநடத்தல. வானப்பிரஸ்தம் :— என்பதுமனைவியோடேனும், அல்லது மனைவியை மைந்தனிடத்திருத்தியேனும் விட்டு, காட்டிற்சென்று மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐவாயின்வழியேவரும் ஐந்தாசைகளையு மொடுக்கி மனத்தை இந்திரியங்களின்வழியே செலுத்தாமல் கோபமுதலியகுணங்களை யொழித்திருப்பது. சந்நியாசமென்பது :— முற்றத்துறத்தல. அதுவானப்பிரஸ்த வொழுக்கமுழுவதுமடைந்து இயமம், நியமம், ஆதனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தியானம், தாரணை, சமாதிஎன்னும் எண்வகையோகவுறுப்பினையுடையராயும், வாய்மையும்மனந்தூய்மையுமுடையராயும் ஆசையைநீக்கி இரும்புண்டநீர்போல் திரும்பாத வீடுபேறடையமுயலுதல் என்று இவற்றின் இயல்புகளையெல்லாம் நன்றாகவிளக்கினான். அதுகேட்டுத் தபதிமக்களும் இவைகளையெல்லாம்கேட்டு மகிழ்ந்தோம், கருவுற்பத்தியை நன்றாகவிளக்கவேண்டுமென்று வேண்டிக்கொண்டனர். அதற்கு அரசனும் கருவுற்பத்தியாவது மாதர் ருதுஸ்ஜ்வலையாகும் நாலாநாள் ஸ்நானம் செய்து அன்றிரவில்நாயகனைவிழைவது. அன்றுமுதல் ஏழுநாளில் ஒருநாள் கருத்தரிக்கும். அக்கருவுக்குத்தாய் உயிரானவாயுஇலவலேசங்கலந்துஉருவை வளர்க்கும். அதுதாயுண்ட அன்னபானாதிகளின் இரசத்தால்உயிர்த்திருக்கும்.

பிரசூதசவாயு முரித்துத்தள்ளுவதனால் அக்கருவெளிவரும். அது வெளிவந்த பின்பு பொறியைந்தினாலும் உலகவிவகாரம் மேற்கொள்ளும். இதுதான்கரு வுற்பத்தியின் வரலாறு என்றனன். அருமையினுமருமையா யிருந்துள்ளது துறவறநெறி. இதனாலன்றோ தேவரும் 'தவஞ்செய்வார் தங்கருமஞ்செய்வார் மற்றவர்-அவஞ்செய்வா ராசையுட்பட்டு' எனவும் கூறியிருக்கின்றனர். இனி எங்களுக்குத் துறவறநெறி கிடைக்குமோவென்று வினாவினார்கள். அதற்கு அரசனும் உயிர்க்கொரு தீங்குநேரினும் தாழாமல் மனத்தளர்ச்சியின்றித் துறவறநெறியினைமேற்கொண்டு சற்கருமஞ்செய்து வருவீராயின் கொண்ட கருத்துநிறைவேறும்; பெறுதற்கரியபேறுங்கிடைக்கும். நீங்களே யல்லகிய உங்கள்முன்னோரும் ஈடேறுவர் என்றான். அதுகேட்டுத் தபதிமக்கள் தம் மூதாதைசொற்படி கேட்டுச் சிந்தைதளராமல் தங்கள்கண்முன் எவ்வளவா பட்ட மேலானவிநோதங்கள் தோன்றினும் அவைகளை ஒருபொருளா நினையாமலும் கலங்காமலும் அரியமுயற்சியில் இருந்தனர்.

இவர்கள் இவ்வாறு இருக்கையில் இதையறிந்த இந்திரன் தன்தூதுவரை நோக்கி நீங்கள் அந்தரலோகத்திலிருக்கின்ற சந்திரவமிசத்தவர்களாகிய தபதிமக்களையழைத்துவாருங்களென, அவர்களும்அவ்வாறேசென்றழைத்தனர். தபதிபுத்திரர்கள் எங்கள் மூதாதையாகிய யயாதிமகாராசன்வந்தாலல்லது வர இசையோமெனமறுத்தனர். தூதுவரும் இச்செய்தியை இந்திரனுக்கறிவித்தனர். இந்திரனும் அவ்வாறே அழைத்துவரக்கட்டளையிட்டான். அவர்களும் யயாதியுடன் தபதிமக்களிருவரையும் விமானத்தில் ஏற்றிச் சுவர்க்கலோகஞ் சேர்த்தனர். இதனாலே உலகில் ஒருகுலத்தில் ஒருசற்புத்திரன் தோன்றுவானாயின் அவனால் அக்குலத்தவரெல்லாம் நன்மையடைவாரென்பதனை விளக்கிற்று என்று வைசம்பாயனர்சொல்ல ஜெனமேஜெயமகாராஜன் மகிழ்ந்து இனி எனக்கு யயாதிக்குப்பின்வந்த சந்திரகுலத்தரசர் சரித்திரத்தையுஞ் சொல்லவேண்டுமென்றனன். அதற்கு வைசம்பாயனர் யயாதிக்கு ஜன்மிஷ்டையினிடமாகத்தோன்றிய புரூரவன் செங்கோல்கொண்டு மனுநெறி தவறாமல் அரசாண்டு ஜெனமேஜெயனைப்பெற்றான். அவன் பிராஜீனனைப் பெற்றான். பிராஜீனன் சையாதியைப்பெற்றான். சையாதி சார்வபூமனைப் பெற்றான். சார்வபூமன் ஜெயசேனனைப் பெற்றான். ஜெயசேனன் ஙயுதனைப் பெற்றான். ஙயுதன்குரோதனைப்பெற்றான். குரோதன்தேவாபியைப்பெற்றான். தேவாபி உருசகனைப்பெற்றான். உருசகன் அரிசகனைப்பெற்றான். அரிசகன் மதிவானைப்பெற்றான். மதிவான் சோடசமகாதானங்களையுஞ்செய்து தருமதேவதையென்றுசொல்ல அரசாண்டுவருகையில் சரஸ்வதியென்னும் நதி பெண்ணுருவங்கொண்டு அவன்மேல் மையல்கொண்டு திடனென்னும் புத்திரனைப்பெற்றுப்போயினள். அத்திடன் காளிந்தியைமணந்து நீலனைப் பெற்றான். அவன் துஷ்டியந்தனைப்பெற்றான். அத்துஷ்டியந்தன் செங்கோல் ஓச்சித் தருமதேவதை நான்குபாதத்தாலும் நடக்க அரசாண்டுவந்தான்.

யயாதிமகாராஜன் சருக்கம்-முற்றிற்று.

---

# துஷ்டியந்தச் சருக்கம்.

துஷ்டியந்தமகாராசன் இளமையிலேயே விளைநிலத்தில்இருந்த மலைகளை யெல்லாம் பறிந்துப்பந்தாடித்திரிவான். குடிகளைப்பாதுகாக்குந்தன்மையில் தாயினுஞ்சிறந்தவனுயிருப்பான். இப்படிப்பட்டஅரசன் தான்மகுடாபிஷேகம் கொண்டபின்பு முன்னிலும் ஆயிரமடங்கதிகமாய் மனுநெறிதவருமல் அரசு செய்துவருநாளில் பதினெண்ணுயிரம் மந்திரிமாரும், ஆறுலட்சத் தறுபத் தாருயிரம் பட்டவர்த்தனரும், மூன்றுலட்சத்து முப்பத்தீராயிரம் மகுட வர்த்தனரும், மற்றுமுதியோரும், புரோகிதரும் புடைசூழ நவமணிபதித்த சிங்காசனத்தில கொலுவீற்றிருந்தான். அத்தருணத்தில வாயிற்காவலாளிகள் அரசன்கொலுமுகத்தில்வந்து அரண்மனைவாயிலில் குடிகளெலலாம் யாதோ ஒருகுறைகண்டு திரண்டுவந்திருக்கின்றூர்களென்று அறிவித்தார்கள். அரசன் அவர்களை வருவிக்கக்கட்டளையிட அவர்களும் அரசன்சமுகத்தில் திரண்டு வந்து சேர்ந்தனர். வந்துசேர்ந்தகுடிகளை அரசன்மரியாதைசெய்து யோக க்ஷேமங்களை வினவினுன். அதற்குக்குடிகளும் “குலமகட்குத்தெய்வங் கொழுநனேமன்ற - புதல்வர்க்குத் தந்தையுந்தாயும் - அறவோர்க், கடிகளே தெய்வ மனைவோர்க்குத் தெய்வம்-இலைமுகப்பைம்பூணிறை.” என்று நீதிநூல் கூறியிருப்பதனல்எங்களுக்கு உம்மையன்றிக்கதிகிடையாது. மேலும் அரசன் கடைமையாவது ‘மாநிலங்காவலனுவான் மன்னுயிர்காக்குங்காலைத் - தானத னுக்கிடையூறு தன்னுற்றன்பரிசனத்தால- ஊனமிகுபகைத்திறத்தாற் கள்வரா லுயிர்தம்மால்-ஆனபயமைந்துந்தீர்த்தறங்காப்பானல்லனே.’ எனப்பெரியோர் சொல்லியிருக்கின்றனர். நமது நாட்டிலோ இக்காலத்தில காட்டுப்பன்றி முதலிய மிருகங்களால் விளைநிலங்கள் பயனெழிந்தன. நாங்கள் உமமைவந்து அடைந்து எங்கள் குறைசொலலிக் கேட்டுக்கொள்ளவந்தோம், இதுதான் எங்கள் மனக்குறையென்றனர். உங்களுக்கு மிருகபயமில்லாதிருக்க இதோ காட்டிற்சென்று வேட்டையாடி வருகின்றேன் போங்கோள்என்று அவர்க ளுக்கு உபசாரஞ்செய்தனுப்பினுன். குடிகளும் அரசனிடத்தே உத்திரவு பெற்றுத் தம்மிருப்பிடஞ்சென்றனர்.

குடிகள்போனபின்பு அரசனுந் தன்மந்திரி, பிரதானி, சேனுபதிமுதலி யோரை அழைத்து நாம் வேட்டையாடிவருவோம்; வேடர், வலைபர்முதலி யோரை வருவிக்கவேண்டுமென்று கட்டளையிட்டுத்தான் அந்தப்புரஞ்சென்று வேட்டைமகுடமணிந்து பல ஆபரணம்புனைந்து வில், அம்பு, வாள், கதை, பிண்டிபாலம், தோமரம், மழுமுதலியஆயுதங்களைத்தாங்கிவாயுவேகம், மனோ வேகம் என்பன பின்னிடத்தக்க குதிரையேறிக் கோட்டைவாயிலைக்கடந்து புறப்பட்டான். இதற்குள் மந்திரிமார்முதலியோர் வேடர் வலையர்களையு மழைத்துக்கொண்டு தேர், யானை, குதிரை, காலாள்என்னும்நாற்படையுஞ்சூழ அரசனேடுவந்து சேர்ந்து, பேரிகை, முரசு, டங்கா, மத்தளம், மிருதங்கம், டமரகம், எக்காளம், காளம், துத்தரி, சின்னமுதலிய வாத்தியங்கள்கடலோசை